என்.எஸ்.முத்துக்குமார்
விஷாரத்

# இலக்கியக் கனிகள்



ஆசிரியர் :

வி. ஆர். கண்ணப்பர்



வெளியிடுவோர் :

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபா (தமிழ்நாடு)

தென்னூர், திருச்சிராப்பள்ளி-17.

# இலக்கியக் கனிகள்




ஆசிரியர் :

வி. ஆர். கண்ணப்பர்



வெளியிடுவோர் :

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபா (தமிழ்நாடு),

தென்னூர், திருச்சிராப்பள்ளி - 620 017.

56-2

## முன்னுரை

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபாவால் நடத்தப் பெறும் உயர்தேர்வுகளின் தமிழ்ப்பிரிவுக்கான புத்தகங்களை வெளியிடுவதற்குச் சபாவின் தமிழ்நாடு கிளை விரும்பியது. காந்தி நூற்றாண்டு விழாவினையொட்டி 'மலர்கள்', 'இலக்கிய மாலை', 'இலக்கியக் கனிகள்', 'அண்ணல் காந்தியின் கதை' என்னும் நூல்கள் வெளிவந்தன. 'இலக்கியக் கனிகள்' என்னும் இந்நூல் மூன்றாம் பதிப்பாக இப்பொழுது வெளியிடப்பெறுகின்றது. சபாவினர் நடத்தும் 'விஷாரத்' தேர்வுக்குரியது இந்நூல். சங்க காலமுதல் இன்றுவரையுள்ள நூல்களைப் பல்வேறு கோணங்களில் கண்டு ஆய்ந்து சிறந்த முறையில் எழுதியுள்ள ஆசிரியர் திரு. வி. ஆர். கண்ணப்பர் அவர்களுக்கு நன்றி.

டி. கே. கிருஷ்ணசாமி, எம்.ஏ.,
செயலாளர்.

## பொருளடக்கம்





# 1. திருமந்திரம்

திருமூல நாயனுர் பாடியருளிய திருமந்திரம் பத்தாந் திருமுறையாகும். திருமூலருடைய காலத்திற்கு முன் சைவசித்தாந்த நூல் எதுவும் தமிழில் தோன்றவில்லை என்னலாம். ஆகவே, திருமந்திரமே சைவசித்தாந்தத்தின் முதனூல் என்று கருதப்படும்.* பின்னுளில் தோன்றியருளிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் முதலான சமய குரவர்கள் சைவத்தினைப் பரப்புதற்கு அடிப்படையாயமைந்தது திருமந்திரமாகும்.

திருநந்தி தேவரின் திருவருள் உபதேசத்தினைப் பெற்ற சிவயோகியார் ஒருவர் அணிமா முதலான எண் வகைச் சித்திகளும் நன்கு கைவரப்பெற்றவர். அகத்திய முனிவரின் நண்பரான இச்சிவயோகியார், முனிவரைக் கண்டு அளவளாவ விரும்பிப் பொதியமலை நோக்கிப் புறப்பட்டார். வழியில் காசி, திருப்பருப்பதம், திருக் காளத்தி, திருவாலங்காடு முதலான பதிகளைத் தரிசித்துத் திருவாவடுதுறையினை வந்தடைந்தார். இத்தலத்தின் கண்ணுள்ள திருக்கோயிலை வலம் வந்து பணிந்த சிவ யோகியார் அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும் வழியில் சாத்தனூர் என்னும் ஊருக்கருகே பசுக்கள் சில உயிரற்ற

---

* The Development of Saivism in South India - Dr. M. Rajamanickam Pillai.

ஒரு மனித உடலைச் சூழ்ந்துநின்று கண்ணீர் வடிப்பதைக் கண்டார். அவற்றை மேய்த்துவரும் மூலன் என்பான் பாம்பின் கொடுவிடத்தினுல் உயிர்நீங்கித் தரையில் கிடத்தலால், அவை துன்பவெள்ளத்தில் மிதந்தன. இறைவன் திருவருளினுல் பசுக்களின் துயரினை நீக்க எண்ணிய சிவயோகியார், தமதுடலை ஓரிடத்தில் மறைத்துவைத்துத் தமதுயிரை மூலனுடலில் புகுத்தினர். மூலன் உயிர்பெற்று எழுந்ததைக் கண்டு மகிழ்ந்த பசுக்கள் அவரை மோந்து கனைத்தன. மகிழ்ச்சிப் பெருக்கினுல் வால்களை மேலே தூக்கித் துள்ளின. மாலைப்பொழுது வந்தது. கன்றை நினைந்த பசுக்கள் தாமே ஊரை நோக்கிச் சென்றன. அவற்றின் பின்னே திருமூலரும் சென்ருர். பசுக்கள் தத்தம் இல்லத்தே செல்லத் தாம் மட்டும் வெளியே நின்ருர். மாலைப்பொழு தாகியும் தனது கணவன் வராதது கண்ட மூலனது மனைவி, தெருவில் நிற்கும் திருமூலரைத் தனது கணவ னெனக் கருதி அழைக்க, 'எனக்கு உன்னுடன் தொடர்பு ஒன்றும் இல்லை' என்று கூறி ஊர்ப் பொதுமடத்தினுள் புகுந்தார். நல்லார் பலர் ஆறுதல் கூற மூலன் மனை யாளும் தனதில்லம் சென்ருள். பொதுமடத்தில் சிவ யோகத்தில் அமர்ந்திருந்த திருமூலர் தமதுடலைச் சென்று தேட, அது காணப்பெறவில்லை.

'சிவபெருமான் தாமருளிய ஆகமங்களின் உண் மைப் பொருளைத் தமிழில் அருளிச்செய்யவேண்டியே அவ்வுடலினை மறையச்செய்தார்' என்னும் உண்மை யுணர்ந்த திருமூலர், திருவாவடுதுறையடைந்து ஓர் அரச மரத்தின்கீழ்ச் சிவயோகத்தில் இருந்து, ஆண்டுக்கொரு

பாடலாக மூவாயிரம் பாடல்களை உலகம் உய்யப் பாடியருளினர்.

'நலஞ் சிறந்த ஞானயோகக் கிரியாசரியை யெல்லாம் மலர்ந்த மொழித் திருமூலதேவர்' எனச் சேக்கிழாரால் ஏத்தப்பெறும் திருமூலர் 'என்னை நன்ருக இறைவன் படைத்தான் தன்னை நன்ருகத் தமிழ் செய்யு மாறே' எனத் தமது அவதார நோக்கத்தை நூலினுள் கூறிச் செல்கின்ருர்.

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்ட நூலாகும். சாத்திர நூலாகவும், தோத்திர நூலாகவும் விளங்கும் திருமந்திரம் அற நூலாகவும் இருத்தலை நூலினை நன்கு பயில்வோர் உணர்வர். எடுத்து வாழ்தலைக் காட்டிலும் கொடுத்து வாழ்தலையே மனிதப் பண்பென அறநூல்கள் கூறிச் செல்லும். காக்கை தனக்குக் கிடைத்த இரையினை மறைத்து உண்ணுது, தன்னினத்தையும் கூவி அழைத்துண்ணும் இப்பெற்றியுடையார்க்கே ஆக்கம் மேன்மேலும் பெருகும். இக்கருத்து :

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள"

என்னும் திருக்குறளில் நன்கு விளக்கப்படுகின்றது. இதே கருத்தினைக் காக்கையின் வாயிலாகத் திருமூலரும் எடுத்து விளக்குதலைக் காணலாம்.

"ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே"

என்னும் பாடலில் 'வேட்கையுடையீர்' என்னுந் தொடர் நாளும் உண்பதையே உண்டும், அவ்வுணவினில் வேட்கை நீங்காது அழுந்திக்கிடக்கும் மக்களைக் குறிப் பதை உணரலாம். அவரிவர் என வேறுபாடு காட்டாது எல்லோர்க்கும் கொடுத்து வாழுமாறு கூறுதலைக் குமணன் பால் பரிசில் பெற்றுவந்த பெருஞ்சித்திரனர் வாக்காலும் அறியலாம். அவர் தம் மனையாளை நோக்கி,

"இன்னோர்க்கு என்னது என்னொடும் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே"

என்று கூறுவது, மேற்கூறிய திருமந்திரப் பாடலோடு ஒப்பு நோக்கத்தக்கது.

அஃறிணை உயிரான காக்கையின் வாயிலாகக் கொடுத்து வாழும் முறையினைத் திருவள்ளுவரும், திரு மூலரும் மட்டுமின்றித் தாயுமானவரும் 'காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்! சேரவாரும் செகத்தீரே' என எடுத்தோதுகின்றார்.

நல்குரவினைக் காட்டிலும் கொடியது எதுவென்று ஆராயப் புகுந்த திருவள்ளுவர், நல்குரவே கொடியது; அதனைக் காட்டிலும் கொடியது வேறொன்றில்லை என் கின்றார். உயர்ந்த கருத்துக்களை நன்குணர்ந்து கூறினும் நல்கூர்ந்தார் சொற்கள் சோர்வுபடும். அறஞ்சாரா நல் குரவு கொண்டவனைப் பெற்ற தாயும் வெறுத்தொதுக்கு வாள். நெருப்பினுள் கிடந்து துயிலுதலும் எளிது; ஆனல், வறுமையில் வாடுவோன் துயிலுதலென்பது ஒரு

நாளும் இல்லை. இவ்வாறெல்லாம், நல்குரவு பற்றித் திருக்குறள் பேசுகின்றது திருமூலரும் வறியவர் வாழ் வினை ஓர் ஓவியமாக நம் கண்முன் நிறுத்துகின்றார்.

"புடவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே"

என்பது திருமந்திரப் பாடலாகும். வறுமை கொண்ட வனுக்கு நல்ல ஆடை ஏது? 'ஆள் பாதி ஆடை பாதி' என்பது உலக வழக்கு. மேலாடையின்றிச் சபை புகுந் தால் இந்த மேதினியோர் நூல் ஆயிரம் படித்திருந்தாலும் மதியார். தோலாடை சுற்றிய அரனுக்குப் பாற்கடல், நஞ்சினை ஈந்தது. பொன்னாடை உடுத்தியிருந்த திரு மாலுக்கோ திருமகளைக் கொடுத்தது.

வறியவனுக்கோ மானத்தைக் காத்துவந்த அரை முழ ஆடையும் கிழிந்து போகின்றது. வாழ்தல் என்பது அவனுக்கு இல்லை. வாழ்தல் வேறு; இருத்தல் வேறு என்பதனை நுண்ணுணர்வு கொண்டோர் அறிவர். செல்வம் இருக்குங்கால் இல்லாத உறவு முறையெல் லாம் சொல்லிக்கொண்டு வந்தவர்களும் வறுமை நிலை கண்டு அற்றகுளத்தின் அறுநீர்ப் பறவைபோல் எட்டிச் செல்வர். கொடையும், கொண்டாட்டமும் நடைப் பிணமாக நாட்டில் இயங்கும் வறியவனுக்கில்லையாம். இவ்வாறு வறுமை வாழ்வு திருமூலரால் உள்ளது உள்ள வாறே எடுத்துக்காட்டப் பெறுகின்றது.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை உடைத்திவ் வுலகு"

எனத் திருக்குறள் கூறும் நிலையாமை, திருமந்திரத்தில் நான்கு அதிகாரங்களில் பேசப்படுகின்றது. பிறப்பு, இறப்பு என்னும் இரண்டு எல்லைகளுக்குட்பட்டது நமது வாழ்வு. நமது இளமை நீரிற் குமிழிபோன்றது. யாக்கை நீர்மேல் எழுத்தாகும். ஆகவே வாழும் ஒருசில நாட்களில் மனிதப் பண்பு கெடாது இருத்தலே சிறந்ததாகும். எமன் என்று வருவான் என்று சொல்லுதல் முடியாது. அவனது பார்வைக்கும் தப்பமுடியாது. 'கூற்றன் வருங்கால் குதிக்கலுமாமே' என்பது திருமூலர் வாக்கு.

ஒருவன் இல்லத்தில் சமையல் ஆயிற்று. அவனும் உணவு கொண்டான். சிறிதுநேரம் மனைவியுடன் பேசியிருந்தான். இடப்பக்கம் சிறிது வலி தோன்றுவதாகக் கூறிய அவன் படுத்தான். அது நெடுந்தூக்கமாக அவனுக்கு அமைந்துவிட்டது. பாடலைக் காண்போம்.

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே."

பல்வகைத் துன்பங்களுக்கும் காரணமாயிருத்தலால் பொருட் செல்வத்தினை முன்னோர் 'வெறுக்கை' என்னும் சொல்லால் குறித்தனர்.

"செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவாவெனப் படுமே"

என்பது குமரகுருபரர் வாக்கு. வறுமையென்பது பொரு ளின்மை மட்டுமன்று. நீங்காத அவாவினையே நல்குர வென்பர். ஆசையில்லாதவர்க்கு என்றும் துன்பம் இல்லையாம். 'அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்' என்பது தமிழ்மறை. திருமூலரும்,

**"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்**
**ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்**
**ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்**
**ஆசை விடவிட ஆனந்த மாமே"**

என ஆசைபற்றிக் கூறுகின்றார். ஆசையை அழிப்ப தால் பேரின்பமும், ஆசையை வளர்ப்பதால் பெருந் துன்பமும் உண்டாகும். ஒரு பொருளையடைய வேண்டும் எனவெழுந்த ஆசை அதனை அடைந்தவுடன் நீங்காது, மேன்மேலும் தொடர்ந்து மனிதரைத் துன் பத்துள் அழுத்துவதை நாம் நாளும் காண்கின்றோம். இதுபற்றியே, ஆசையை விட்டொழிப்பதால் பேரானந் தம் உண்டாகுமெனத் திருமூலர் கூறுகின்றார்.

சுவரை வைத்துத்தானே சித்திரம் எழுதமுடியும்? 'காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா' என்னும் கருத்தை மறுப்பது போன்று திருமூலர் 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன்' என் கின்றார். ஏன் தெரியுமா? உடலாகிய கோயிலில் இறைவன் எழுந்தருளியுள்ளான். ஆகவே அகமும், புறமும் தூய்மையாக்கி உடலினை ஓம்புமாறு கூறு கின்றார்.

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே."

எனக் கூறுவதோடு, மற்றும் ஒரு பாடலில், 'உள்ளம் கருவறை, ஊனுடம்பு ஆலயம், வாய் கோபுர வாசல், சீவன் சிவலிங்கம், ஐம்புலன்களும் ஒளிவிளக்கு' என்று பேசுவது உடலினை நாம் நன்கு பாதுகாக்க வேண்டு மென்பதை வற்புறுத்துகின்றது.

ஏழை எளியவர்க்கு அளிக்கும் பொருள்களெல்லாம் முடிவில் இறைவனையே சென்றடைகின்றன. மக்கள் பணியே மகேசன் பணியாகும். இவ்வாறு விவேகானந்தர் போன்ற பெருமக்களனைவரும் கூறிச் செல்வதையே திருமூலரும்,

"நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே"

எனப் பாடுகின்றார்.

சிறந்த பல உவமைகளைத் திருமந்திரத்தில் காணலாம். சுவைகொண்ட மாந்தளிர் முதலியன இருக்க, அவற்றை ஒதுக்கி வேப்பிலையினையே ஒட்டகம் விரும்பித் தின்னும். அறுசுவையுணவினைப் பொற்கலத்தில் பெய்து அளிப்பினும், நாய் பிறரது எச்சிலையே விரும்பி எதிர் பார்த்து நிற்கும். திருவனைய மனைவி இல்லத்தேயிருக்க அவளை ஒதுக்கிப் பிறன்மனை நயந்து நிற்பார் செயலும் மேற்கூறிய விலங்குகளின் தன்மையினை ஒத்ததேயாகும்.

முக்கனிகளுள் ஒன்ருன இனிய பலாக்கனியை உண்ணுது, காட்டகத்தேயிருக்கும் ஈச்சம்பழத்தை நாடிச் சென்று பல துன்பங்களை அனுபவித்தாற் போன்றது பிறன்மனை நயத்தல் என்பதனைக் கீழ்வரும் பாடலில் திருமூலர் கூறுகின்ருர்.

"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே."

பிறன்மனை நயந்த இந்திரனும், இராவணனும் பட்ட பாட்டினை அறியாதார் யார்? பிறன்மனை நயந்து செல்வோன் கொள்ளும் அச்சங்களை நாலடியார் வரிசைப் படுத்துவதைக் காணுங்கள் :

"புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சம்
துய்க்குமிடத் தச்சம் தோன்ருமல்—காப்பச்சம்
எக்காலும் அச்சம் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறனில் புகல்."

விறகினில் நெருப்பும், பாலினில் நெய்யும், மலரினில் மணமும் இருத்தலை அனைவரும் அறிவர். ஆயினும் அவை கண்ணுக்குப் புலனுவதில்லை. சீவனில் சிவம் கலந்திருப்பதும் இதுபோன்றே கண்ணுக்குத் தெரிவதில்லை. இவ்வழகிய உவமை,

"பூவினில் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது"

என்னும் வரிகளில் கூறப்பெறுகின்றது.

'சூனிய சம்பாஷணை' என்னும் பகுதியில் கருத்துச் செறிவுகொண்ட பாடல்கள் பலவற்றைக் காணலாம். ஆழ்ந்து கற்போர்க்கே பாடல்களின் அரிய பொருள் விளங்கும்.

"வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே"

'கத்தரி விதைக்கப் பாகல் முளைத்தது. புழுதியைத் தோண்டிப் பார்த்தாலோ பூசணி பூக்கின்றது. இது கண்ட தோட்டக் குடிகள் தொழுது ஓடுகின்றனர். அவர்கள் சென்ற பிறகு தோட்டமுழுவதும் வாழை பழுத்தது' மேலாகக் காணுவோருக்கு இவ்வாறுதான் பொருள் தோன்றும். ஆனால் உண்மைப் பொருள் இது வன்று. 'யோகப் பயிற்சியினைச் செய்ய வைராக்கியம் தோன்றியது. தத்துவ ஆராய்ச்சி செய்ய, சிவம் வெளிப் பட்டது. சிவம் தோன்றிய அளவில் பஞ்சேந்திரியங் களின் செயல்கள் அடங்கின. வாழைக்கனியாகிய ஆன்மலாபம் கிட்டியது'* என்பதே உண்மைப் பொரு ளாகும்.

இனி, மற்றொரு பாடலைக் காண்போம்.

"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாச் சொரியுமே"

---

* திருமந்திரமணி துடிசைகிழார் அ. சிதம்பரனார்.

ஒவ்வொருவரிடத்தும் பஞ்சேந்திரியங்கள் உள்ளன. அவற்றை அடக்கியாள்வோர் பேரின்ப வாழ்வில் திளைப்பர் என்பதே இப்பாடற் பொருளாகும்.

இவ்வாறு, பல அரிய உண்மைகளைத் தன்னுள் பொதிந்து வைத்திருக்கும் திருமந்திரம் குறித்து ஔவையார் கூறுவதைக் காண்போம்.

> **தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
> **மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை**
> **திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
> **ஒருவா சகமென் றுணர்.**



# 2. தம்பியர்

'யாதும் ஊரே யாவரும் கேளீர்' என்பது ஆன்ருேர் கண்ட நன்னெறியாகும். 'ஒன்றே குலன் ஒருவனே தேவன்' என்னும் தொடரும் இதனையே வலியுறுத்து கின்றது. உலக முழுதும் ஒரே குடும்பமாக வாழ்தர்கும், சகோதர நேயம் தழைத்து வளர்தற்கும் அருளாளர் பலர் முயன்றனர்; முயன்றும் வருகின்றனர். உலகப் பெரும் போரினுல் மனிதகுலம் அழிதல் கூடாது; அன்பும் அதன் வாயிலாக அருளும் தழைத்து உலக ஒற்றுமை வளர வேண்டுமென ஐக்கிய நாட்டமைப்பு வற்புறுத்தி வரு கின்றது. உடன்பிறப்பென்னும் பாசத்தையும், உடன் பிறவாதோரையும் உடன்பிறந்தோராகக் கொண்டு வாழும் நெறியையும் இலக்கியங்கள் பல உணர்த்து கின்றன.

இராமகாதை நமக்குக் காட்டும் தம்பியர் டலர். ஆதிசேடனின் அவதாரமெனச் சொல்லப்படும் இலக் குவன் அண்ணன் இராமன்பால் பெரும் பற்றுடையவன் ஆவான். அண்ணனுக்கு இல்லாத வாழ்வு தனக்கும் தேவையில்லையென உதறித்தள்ளிக் கானகம் சென் றவன். இராமனுக்குத் துன்பம் நேரும் பொழுதெல்லாம் சினங்கொண்டு பொங்கியெழுகின்ருன். சிற்றன்னை கைகேயியால் இராமன் காடுசெல்ல நோந்தது என்ப தைக் கேள்வியுற்ற இலக்குவன், 'எவர்வந்து தடுப்

பினும் பெண்ணாகிய கைகேயியின் எண்ணம் நிறை வேறவிடேன்' என்றியம்பி வெகுண்டு நிற்கின்றான். தம்பியின் சினத்தைத் தணிக்கவந்த இராமன் 'சீற்றம் விளையாத நிலத்து உனக்கு எங்ஙனம் சினம் எழுந்தது?' என வினவி, தான் அரசு துறந்து காடு செல்வது விதியின் பிழையினாலாகும் என்கின்றான். அப்பொழுதும் இலக்குவன் சினம் தணியாது, விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி' என இயம்புகின்றான். 'பெற் றெடுத்த தாய் தந்தையரை வெற்றிகொண்ட பின்போ உன் சினம் தணியும்? என் சொற்களைக் கேட்பதால் உனக்கு வரும் தீங்கு யாது?' என இராமன் கூற இலக்குவன் சினம் தணிகின்றது.

தாய் தேடிவைத்த நாட்டாட்சியை ஒதுக்கித்தள்ளி அண்ணனைக் கண்டு அழைத்துச் செல்ல, பரதன் பெரும் படைசூழக் காட்டிற்கு வருகின்றான். இவனது வருகை யைக் குகன் தவறாகப் புரிந்துகொண்டது போன்று, இலக்குவனும் தவறாகக் கருதிப் பரதனைக் கொன்றழிப்ப தாகக் கூறுகின்றான். இப்பொழுதும், இராமபிரான் பரதனுடைய பெருமைகளை எடுத்துக்கூறிச் சினத்தைத் தணிக்கின்றான். இவ்வாறு இலக்குவன் கொள்ளுஞ் சின மெல்லாம் இராமன்பால் வைத்த அன்பினாலன்றோ?

இனி, இலக்குவன்பால் இராமன் கொண்ட பேரன் பினை விளக்கும் ஒரு நிகழ்ச்சியினைக் காண்போம். தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவுக்கு இறுதிக்கடன் களைச் செய்துமுடித்தபின் இராம இலக்குவர் இராவண னிருக்குமிடம் தேடிச் செல்லுங்காலை, வழியில் ஒரு சோலையில் தங்கினர். அப்பொழுது, இராமனது தாகந்

தணித்தற்கு நீர் கொணரச்சென்ற இலக்குவனைக் கண்டு அயோமுகி என்னும் அரக்கி காமுற்றுல் தன்னை மனைவி யாக ஏற்குமாறு பலவாறு வேண்டினுள். தனது சொற் களுக்கு இசையாதது கண்ட அயோமுகி இலக்குவனைத் தூக்கிச் சென்றுவிட்டாள்.

நெடுநேரமாகியும், இலக்குவன் வராதது கண்ட இராமன் வருந்தித் துடிக்கின்ருன். 'சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் என் தம்பியையும் கவர்ந்து கொண் டானே? அல்லது இராவணனது வஞ்சனையால் இறந்து பட்டானே? எனது அரிய உயிராக இருக்கும் இளையாய்! என்னை வெறுத்துச் சென்றனையோ? விரைந்து வருக! என்னைப் பெற்றெடுத்த தந்தையரையும், தாயரையும், சீதையையும் பிரிந்து வாழும் நான் உயிர் தாங்கிநிற்பது உன்னுலன்ருே? நீ இருக்குமிடத்தையும் எனக்கு எடுத் துரைப்பார் எவருமிலர்!' என்று வருந்தியுரைப்பவன் முடிவாக

''அறப்பால் உளதேல் அவன்முன் னவனுய்ப்
பிறப்பா லுறின் வந்து பிறக்க''

என்று கூறி இறக்கத் துணிகின்ருன். அங்நிலையில், இலக்குவனுல் மூக்கறுபட்ட அரக்கி எழுப்பிய பேரொலி கேட்டு, தம்பியின் இருப்பிடம் உணர்ந்து சென்று, அவனைக் கண்டு எல்லையற்ற உவகை கொள்கின்ருன்.

இந்திரசித்து ஏவிய நாகபாசத்தினுல் இலக்குவன் அழிந்துபட்டால், தானும் உயிர்துறப்பதாக இராமன் கூறும் சொற்கள் அவனது அன்பின் ஆழத்தைக் காட்டா நிற்கும். இலக்குவன் இந்திரசித்தினைக் கொன்று வெற்றி

யோடு வந்த காலத்துச் சீதையைத் தான் அடைந்துவிட்ட தாகவே கூறி இராமன் கொள்ளும் மகிழ்ச்சியினைக் கீழ் வரும் பாடல் நன்கு விளக்கும்.

"கம்ப மதத்துக் களியானைக்
காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து
குறுகினள் என்று அகங்குளிர்ந்தேன்
வம்பு செறிந்த மலர்க்கோயில்
மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி யுடையான் பகையஞ்சான்
என்னு மாற்றம் தந்தனையால்"

குகனால் பெரிதும் போற்றப்படும் பரதனைக் குறித்து இராமகாதை கூறுவதனை இனிக் காணலாம். 'தன்மகன் சான்றோனெனப் பிறர் கூறக் கேட்ட தாய், அவனை ஈன்ற ஞான்றினும் பெரிதுவப்பாள்' என்பது தமிழ் மறை. தன் மைந்தன் முடிசூடி வருவான்; அவன் வரு கின்ற காட்சியைக் கண்ணாரக் கண்டு களிக்கவேண்டும் என மகிழ்ந்து நிற்கும் கோசலைமுன், குழைக்கின்ற கவரியும், வெண்கொற்றக் குடையுமின்றி இராமன் தமியனாக வருகின்றான். 'முடிசூடுதற்கு ஏதேனும் இடை யூறு உண்டோ?' என வினவும் கோசலைக்கு, 'நின் காதல் திருமகன் **பங்கமில் குணத்து எம்பி பரதன்** முடி சூடுகின்றான்' என விடையிறுப்பதன் வாயிலாகப் பரதனுடைய பண்பு நலத்தினை இராமன் தொட்டுச் செல்கின்றான்.

தயரதன் இறந்துபட்டதனைச் செவியுற்ற பரதன் பலவாறு புலம்பி, இராமனைக் கண்டு வணங்கினாலன்றித் தன்துயர் தீராதெனக் கூறவந்தவன்,

> "எந்தையும் யாயும்எம் பிரானும் எம்முனும்
> அந்தமில் பெருங்குணத்து இராமன் ஆதலால்
> வந்தனை அவன்கழல் வைத்த போதலால்
> சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலாது"

என்கின்றான். பங்கமில் குணத்தினைக் கொண்ட பரதனுக்கு அண்ணனாக அந்தமில் பெருங்குணத்து இராமன் இருத்தலைக் கம்பர் நயம்படத் தெரிவிக்கின்றார்.

பன்னருங் கொடுமனப் பாவியாம் கைகேயிமுன் இருத்தற்கு நாணிக் கோசலைபால் வந்த பரதன் அவளைத் தொழுது கூறும் சொற்கள், கோசலைக்கு அவனிடத்திருந்த ஐயத்தை அகற்றத் துணை செய்கின்றன. அறக்கடவுளும் நடுக்கங்கொள்ளுமாறு பரதன் கூறும் வஞ்சினம் அவனது பண்பினை மேலும் விளக்கா நிற்கும். வசிட்டமுனிவன் பரதனை அரசபாரம் ஏற்குமாறு வேண்ட, அதனை மறுத்துக் கூறும் பரதனது மொழிகளைக் கேட்டு அவையோர் அவனைப் பெரிதும் பாராட்டிக் கூறுகின்றனர்.

> "ஆன்ற பேரரசனும் இருப்ப ஐயனும்
> ஏன்றனன் மணிமுடி ஏந்தல் வேந்தநீ
> வான்தொடர் திருவினை மறுத்தி மன்னீளங்
> தோன்றல்கள் யாருளர் நின்னில் தோன்றினார்?"

'தந்தையிருக்க எனக்கு அரசுரிமை ஏன்?' என்னாமல், மன்னவன் கட்டளையென்று அரசாட்சியை ஏற்றுக்

கொண்ட இராமனைக் காட்டிலும், பரதன் உயர்ந்து விளங்குவதாக அவையோர் கூறுதலும்,

" தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினோய் தன்மைகண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா "

எனப் பரதனைக் குகன் புகழ்ந்து கூறுதலும் ஒப்புநோக்கி மகிழத்தக்க பகுதிகளாம்.

காட்டில் வாழும் வேடன் குகன், இராமனிடத்துக் கொண்டுள்ள அன்பினை, படையுடன் வந்த பரதனைக் கண்டு அவன் வெகுண்டு கூறிய சொற்களால் உணரலாம். பரதனது சேனையினை எலிகளாகவும், தன்னைச் சீறும் பாம்பெனவும் கூறுகின்றான். ஆம்! ஆயிரக் கணக்கில் எலிகள்கூடி யாது பயன்? ஓர் அரவம் சீறினால் போதும். அத்தனை எலிகளும் அஞ்சி ஓடும். இவ்வாறு வெகுண்டுகூறும் குகன், அவனது தோற்றத்தினைக் கண்டு மனம் மாறுகின்றான். பரதனது எளிய தோற்றத்தினை ஓர் ஓவியமாகக் கம்பநாடார் நம் கண் முன் நிறுத்துகின்றார்.

" வற்கலையி னுடையானை
மாசடைந்த மெய்யானை
நற்கலையில் மதியென்ன
நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின்று இடைவீழ
விம்முற்று நின்றொழிந்தான் "

பரதனுடைய உயர் பண்பினை இராமன் சொற்களில் காணலாம்.

"எனைத்துள மறையவை இயம்பற் பாலன
பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே" எனவும்,
"சேனுயர் தருமத்தின் தேவைச் செம்மையின்
ஆணியை அன்னது நினைக்க லாகுமே"

எனவும் இலக்குவனுக்கு இராமன் உணர்த்துகின்றான்.

இலங்கைவேந்தன் இராவணனது தம்பியருள் கும்பகருணனை இனிக் காணலாம். வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும், நாரதமுனிவர்க்கேற்ப நயம்பட உரைத்த நாவும், சங்கரன் கொடுத்த வாளும் கொண்டவன் இராவணன். அவனது இளவல் கும்பகருணன் வீரமற்றவனா? இவன் தோள்வலிமை, "தோளொடு தோள்செலத் தொடர்ந்து நோக்குறின் நாள்பல கழியுமால்" என இராமனால் வியந்து கூறப்படுகின்றது. வீடணன் போன்று இராவணனை வெறுத்து, இராமனுடன் இவன் நட்புக் கொள்ளவில்லை. கர்ணனைப் போன்று செஞ்சோற்றுக் கடன் கழித்தலே தனக்குப் புகழும் கருமமும் தருமமுமாகும் என உணர்கின்றான். முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய பெருந்தவமும் கொண்ட இராவணன் தம்பியரின்றித் தரையில் மாண்டு கிடத்தல் கூடாதென இரக்கங் கொள்கின்றான். இராமனுடன் நட்புக் கொள்ளுமாறு கூறும் வீடணனுக்கு,

"நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்கு
உயிர்கொடாது அங்குப் போகேன்"

எனக்கூறுவது கும்பகருணனது உயர்பண்பை விளக்கு கின்றது. ஆயினும், இராவணன் செல்லும் தீயநெறி யினைக் கடிந்துரைக்கின்றான். பிறன்மனை நயந்த இராவணன் செய்கையால் அரக்கர் புகழ் அடியோடு தொலைந்தது எனவும் பேசுகின்றான். 'தனது பார்வை யாலேயே கொல்லும் இயல்பினைக் கொண்டது திட்டி விடம் என்னும் பாம்பு. அதுபோன்று, தன் பார்வை யாலேயே அரக்கர் குலத்தினை வேரறுக்கவல்ல கற்பு நிறைந்தவள் சீதை. அவளை இராமன்பால் கொண்டு விட்டு, அவனது திருவடிகளை வணங்கி வாழ்தலே நல்லது' எனக் கூறும் கும்பகருணனுக்கு,

"மானுடர் இருவரை வணங்கி மற்றும்அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்
யானது முடிக்கிலேன் எழுக போக"

என இராவணன் விடையிறுக்கின்றான்.

'ஒருத்தரின் முன்னஞ் சாதல் உண்டவர்க்கு உரியது' என்னும் அறத்தின்வழி நிற்கும் கும்பகருணன் முடிவாக இராவணனுக்குச் சில கூறிப் போருக்குச் செல்லு கின்றான். 'விதியானது நம்மை அழிவின் பாதையை நோக்கித் தள்ளுகின்றது. இராமனுடன் போரிட்டு வெற்றியுடன் நான் இங்கு வருவேனெனக் கூறிலேன், போரில் இறந்துபடுவேன். அவ்வாறு இறந்துபட்டால், அப்பொழுதாவது சீதையை இராமனிடத்து விட்டுவிடுக. என்னை வெற்றிகொள்வோர் இவ்வுலகில் உளரெனில், அவர்கள் உன்னையும் வெல்லுதல் உறுதியாகும். மன்னவ! இந்நாள்வரை யான் ஏதேனும் பிழை புரிந்

திருப்பின் மன்னித்தருள்க! இன்றோடு உன் முகத்தைக் காணும் நல்வினையினையும் இழந்தவன் ஆனேன்' எனக் கூறிச் சென்றவன் உயிர்கொடுத்துப் புகழ்கொள்ளு கின்றான்.

கச்சியப்ப சிவாசாரியார் பாடியுள்ள கந்த புரா ணத்துள் மேற்கூறப்பெற்றது போன்ற ஒரு நிகழ்ச்சி வந்துள்ளது. அதனைக் காண்போம். ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆளுமாறு சிவபெரு மானால் வரம் தரப்பெற்றவன் சூரபதுமன் ஆவான். பன்னிரு தடந்தோள் கொண்ட பகவனைப் பால னென்றே கருதி அவனுடன் பொருது மைந்தரை இழக் கின்றான். தனது தம்பி சிங்கமுகனை அழைத்து ஆறுமுக னுடன் போரிட்டு அவன் வலியழித்து வருமாறு கூறு கின்றான். 'துங்க மதாகிய சூர் துணையானோன், அங்க வனில் பெரிது ஆற்றல் படைத்தோன்' எனச் சிங்க முகன் வலியினைக் கந்தபுராணம் பகர்கின்றது. கும்ப கருணனைப் போன்று இவனும் அண்ணனுக்கு முதலில் அறமுரைக்கின்றான்.

'வலிமை நிறைந்த உன் மைந்தரையும், அமைச்ச ரையும், மற்றவரையும் இழந்து நிற்கும் உன் எண்ணம் மிகவும் இழிந்ததாகும். மூலமும் முடிவுமில்லாத மூர்த்தி யைப் பாலனென்று எண்ணுகின்றாய். பின்வரும் விளை வினை அறியாது வாழும் உனக்கு என் சொற்கள் நஞ் சாகத் தோன்றுகின்றன. ஊழின் வல்லமையை வென் றவர் யாவர்?' எனக் கூறியவன் முடிவாக,

"கந்தனும் ஒருவனைக் கடக்கப் பெற்றிடின்
வந்துனைக் காண்பனால் மற்ற தில்லையேல்

அந்தம தடைவரால் ஆரும் ஐயநீ
புந்தியின் நினைந்தன புரிதியால்”

என்றுரைத்துப் போர்மேற்சென்று புகழ் பெறுகின்றான். இத்தகைய சிறந்த தம்பியரைப் பெற்றிருந்தும் இராவண னும், சூரபதுமனும் அழிந்து படுதலை விதியின் விளை வெனக் கூறலாம்.

யாகத்தால் தோன்றிய நால்வர் தியாகத்தால் எழுவரான வரலாற்றினை இராமகாதை நன்கு எடுத் தியம்புகின்றது. தன்னிலும் தாழ்ந்த நிலையிலுள்ள கங்கைவேடன் குகனையும், குரங்கினத் தலைவன் சுக்கிரீ வனையும், அரக்கன் வீடணனையும் தம்பியராக இராமன் ஏற்று வாழும் திறத்தினைக் கம்பர் சொற்களாலேயே படித்து மகிழலாம்.

“குகனொடும் ஐவ ரானோம்
முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவ ரானோம்
எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய!
நின்னொடும் எழுவ ரானோம்
புகலருங் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் நுந்தை.”



# 3. இலக்கியக் கரும்பு

புலவர்க்கு ஔடதம் எனப்படும் நைடதம் பாடிய அதிவீரராமபாண்டியர் ஒருநாள் தனது அவையோரை நோக்கி ஒரு வினு எழுப்பினுர். தாம் பாடிய நைடதம் கற்பனைச் சுவையில் எவ்வாறு சிறந்து விளங்குகின்ற தென்பதே அவரெழுப்பிய வினுவாகும். அவையோர் கூறுவதறியாது முதலில் திகைத்தனர். ஏனெனில், நூலின் பிற்பகுதியில் இலக்கியச் சுவை குறைந்து, சென்று தேய்ந்திறுதல் என்னும் குற்றம் காணப்பட்டது. ஆயினும், தம் கருத்தை வெளிப்படையாகக் கூருது, 'கரும்பைச் சுவைப்பது போலுள்ளது' என்றனர். கரும்பினை அடிப்பகுதியிலிருந்து சுவைப்போர் முடிவில் இனிமை குறைதலை உணர்வர். அதுபோன்று, நைடதம் கற்போரும் நூலின் பிற்பகுதி சுவை குன்றியிருத்தலை உணர்வரென்பதே அவையோர் கூறியதன் உண்மைப் பொருளாகும்.

இத்தகைய கரும்பினைப் பற்றி இலக்கியங்கள் கூறுவதனைக் காண்போம். அதியமான் நெடுமான் அஞ்சியினது முன்னேர் கரும்பினை உலகிற்குக் கொணர்ந்து தந்ததாகப் புறநானூறு கூறுகின்றது.

> "அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
> அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்"

என்பது ஔவையார் வாக்காகும்.

கயவரின் இயல்பினைக் கூறவந்த திருவள்ளுவர் கரும்பினை அவர்க்கு உவமையாகக் கூறிச்செல்கின்றார். வறியவர் தம் குறையினைச் சென்று கூறிய அளவில் இன்முகங்காட்டி, இனிது பேசித் தம்மாலியன்ற உதவி யனைத்தும் செய்வர் சான்றோர். ஆனால், கீழானவரோ யாது கூறியும் கேளாது வாளா இருப்பர் ஆலையிலிட்ட பிறகே கரும்பு இனிய சாற்றினைத் தருவதுபோன்று, நன்கு ஒறுக்கப்பட்ட பின்னரே கீழோர் பயன்படுவர். இக்கருத்து,

> "சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
> கொல்லப் பயன்படும் கீழ்"

என்னும் திருக்குறளில் நன்கு விளக்கப்பெறுகின்றது.

ஒவ்வொரு திருக்குறளையும் ஒரு வரலாற்றின் வாயி லாக விளக்க எழுந்த நூல்கள் தமிழில் பல உள்ளன. தினகர வெண்பா, இரங்கேச வெண்பா, முதுமொழி மேல் வைப்பு, சிவசிவ வெண்பா, குமரேச வெண்பா என்பவை அவற்றுள் சிலவாகும். செகவீர பாண்டியர் பாடிய குமரேச வெண்பா மேற்கூறப்பெற்ற திருக் குறளை வரலாற்றின் துணை கொண்டு விளக்குதலைக் காண்போம்.

பொறுமையினை அணிகலனாகப் பூண்ட தருமன், துரியோதனன்பால் முனிவரையும், கண்ணனையும் தூதனுப்பி நாடு கேட்கின்றான். நாடு தரமறுத்தால், ஐந்து ஊர்களைக் கேட்குமாறும். அவையும் தரமறுப்பின், ஐந்து இல்லங்களை வேண்டுமாறும் கண்ணனிடத்துத் தருமன் கூறியனுப்புகின்றான். விதுரனும், வீடுமனும், துரோணனும், கிருபனும் நயவுரைகளைக் கூறியும்

கேளாத துரியோதனன் நாடு தரவும், ஊர்தரவும் மறுக்கின்ருன். முடிவில் பாண்டவரால் அழிக்கப்பட்டு நாட்டை இழக்கின்ருன். இந்நிகழ்ச்சியினைச் செகவீர பாண்டியனுர் தமது நூலில் கீழ்வரும் பாடலில் அழகுற விளக்குகின்ருர்.

"சொல்லக் கொடாத துரியோதனன் பின்புஙன்
கொல்லக் கொடுத்தான் குமரேசா - மெல்லப்போய்ச்
சொல்லப் பயன்படுவர் சான்ருேர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்"

நாலடியார் கரும்பினை உவமையாக வைத்து நமக்குப் பல உண்மைகளை உணர்த்துகின்றது. அறிவுடைய பெருமக்களது நட்பு கரும்பினை நுனியிலிருந்து தின்ருர் போன்றது. ஆனல் பண்பற்ற தீயார் தொடர்போ கரும்பினை அடியிலிருந்து சுவைத்தலை ஒக்கும். ஆம்! இடித்துரைக்கும் தன்மையற்ற தீயார் நட்பு முதலில் இனித்துப் பின் கசக்கும். சான்ருேர் தொடர்பு முதற்கண் அவர் கூறும் நல்லுரையால் கசந்து முடிவில் நன்மை பயக்கும்.

"பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம்பட வருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து".

இதே கருத்தினை நாலடியாரிலும் காணலாம்.

"கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
இடித்துநீர் கொளினும் இன்சுவைத்தே ஆகும்".

இதுபோன்று, நற்குடிப் பிறந்தாரை எவ்வளவு வருத்தினும், இகழ்ந்து கூறினும் மனம் மாறுபட்டுத் தீய

சொற்களைக் கூருர்; தீயனவும் செய்யார். தம்மை ஒரு கயவன் கொன்ற காலத்தும் காந்தியடிகள் வாயி னின்று இறைவன் திருநாமமே எழுந்தது. இயேசு பிரானைச் சிலுவையிலிட்டுத் துன்புறுத்திய பொழுதும் அவர் இறைவனை நோக்கி, "இறைவா! இவர்கள் இன்னதென்றறியாது செய்யும் பிழையினை மன்னித் தருள்க!" என்று வேண்டுவது அவரது தெய்வப் பண் பினைக் காட்டுகின்றது.

"தன்னிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பலபாடு படும்போதும் பரிந்துஎந்தாய்
இன்னதென அறிகில்லார் தாம்செய்வது இவர்பிழையை
மன்னியும்என்று எழிற்கனிவாய் மலர்ந்தார்நம் அருள்
[வள்ளல்."

என்பது ஏசுவின் பெருமையினை விளக்கும் அருமைப் பாடலாகும்.

சிந்தனைக்கு எட்டாதவனுக இறைவன் இருக்கின் ருன். ஆனுல், தன்னை அன்புடன் வணங்கி வழிபடும் அடியவர்க்கு எளியவனுக வந்து அருள் புரிகின்ருன். இறைவனது கருணைத்திறம் "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே" எனச் சிறப்பிக்கப் பெறுகின்றது. அளக்கலாகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலை யும் தோற்றமும் கொண்டது மலை. இவ்வாறு ஓங்கி உயர்ந்த மலையாக இருக்கும் இறைவன் அன்பெனும் பிடியுள் சிக்கித் தவிக்கின்ருனும். இம்மட்டோ? தெவிட் டாத பேரின்பம் தந்து அடியவரை மகிழவைக்கின்ருன். இறைவனைக் கனியாகவும், அமுதாகவும் கண்ட பெரி யோர் கரும்பாகவும் அவன் இனிப்பதாகக் கூறு கின்றனர்.

"ஆலைப்படு கரும்பின் சாறுபோல அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான் காண்" எனவும், "கரும் பினில் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனுரே" எனவும் இறைவனைப் பாடிப் பரவுகின்றூர் திருநாவுக்கரசர், இறைவனை இனியவனுகக் கண்டது போன்றே இறை விக்கும் கரும்பின் பெயரைச் சூட்டி மகிழ்ந்தனர். திருப் புறம்பயத்தில் எழுந்தருளியுள்ள அம்மையின் திருநாமம் **கரும்படுசொல்லம்மை** என்பதாகும்.

மன்மதன் **கருப்பு வில்லி** என இலக்கியங்களில் பேசப்படுகின்றுன். கரும்பினை வில்லாகவும், மலர்களை அம்பாகவும் கொண்டு இவன் காதலரைப் படுத்தும் பாட்டினை அறியாதார் யார்? சூரபதுமன் என்னும் அரக்கன் தோன்றித் தேவர்க்கும், மனிதர்க்கும் இன்னல் பல இழைத்தான். அவனுல் தோன்றிய இன்னலை நீக்கு தற்கு, இந்திரன் மேருமலையில் சிவனை நினைந்து தவங் கிடந்தான். இந்திரனது தவத்திற்கு இரங்கிச் சிவபெரு மான் அவனிடத்து வந்து, "எனக்கு ஒரு குமரன் தோன்றுவான். அவன் அரக்கரை அழித்து உங்களுக்கு வாழ்வளிப்பான்" எனக்கூறி மறைந்தார். நாட்கள் பல சென்றன. சிவபெருமான் யோகநிலையில் இருந்தார். உமையம்மையும் தவமேற்கொண்டிருந்தார். இவ்வாறி ருந்தால் திருக்குமரன் எங்ஙனம் தோன்றுவானென இந்திரன் கவலையுற்று, நான்முகனிடத்துச் சென்று தன் குறையினை இயம்ப, நான்முகன் திருமாலிடத்துச் சென்று குறைதீர வழி கேட்டான். "சிவபிரான் யோகம் நீங்கி உமையம்மையைத் திருமணம் புரிந்து போகத்தில் ஈடுபட்டாலன்றி நமது துயர் ஒழியாது. ஆகவே யோகத்

திலிருக்கும் சிவபெருமானது தவத்தைக் கலைக்க மன்மதனல் மட்டுமே முடியும். சிவனது மோனம் கலைந்த பின்னரே நம் துன்பம் தீருதற்குத் திருக்குமரன் தோன்றுவான்'' எனத் திருமால் நான்முகனிடத்துக் கூறினர். இது கேட்ட நான்முகனும் மன்மதனிடஞ் சென்று தன் கருத்தைக் கூற, முதலில் அவன் அஞ்சி மறுத்தான். ஆனல், நான்முகன் அச்சுறுத்தவே சிவன்மீது மலர்க் கணை எய்தற்குச் சென்றன். "நறுமலர் வாளி ஐந்து நாதன்மேல் செல்லவிட்டான். அவன் ஏவிய வெம்பகழி ஐந்தும் தம்மீது பட்ட அளவில், சிவன் சிறிதே வேளைப் பார்த்தனன். பார்த்தலோடும் கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமனைச் சுட்டது. கயிலை முற்றும் புகை சூழ்ந்தது'' மன்மதன் எரிந்து சாம்பலானன். இரதியின் வேண்டுதலால் மன்மதன் அவளுக்கு மட்டும் உருவமாயும், ஏனையோருக்கு அருவமாயும் இருக்குமாறு சிவபெருமான் அருள் செய்தார். அன்றிலிருந்து மன்மதன் அனங்கனனன். இது கந்தபுராணம் கூறும் வரலாருகும்.

கரும்பினை வில்லாகக் கொண்ட மன்மதனுக்குத் தென்றலே தேராகும். மலர்கள் ஐந்தினைக் கணைகளாகக் கொண்டுள்ளான். அம்மலர்கள் செய்யும் செயல்களைக் கீழ்க்காணும் பாடல் இனிது விளக்கும்.

"நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணர்வும் நீக்கும் அசோகு - நுனித்துணரின்
முல்லை கிடைகாட்டும் முழுநீலம் மாதராய்க்
கொல்லும் மதன் அம்பின் குணம்."

சிவப்பிரகாசர் நன்னெறி, பிரபுலிங்க லீலை, திரு வெங்கைக் கோவை, நால்வர் நான்மணிமாலை முதலான சிறந்த நூல்களைப் பாடியவர் ஆவார். இலக்கியச் சுவை யும், உவமை நலமும் இவரது பாடல்களில் நிறைந்து காணப்படும். வேலையர், கருணைப்பிரகாசர் என்னும் இரு வரும் இவரது உடன்பிறந்தோர் ஆவர். சிவப்பிரகாசர் உயிர் துறந்தபொழுது பிரிவாற்ருத வேலையர்,

**"அல்லிமலர் பண்ணவனும் ஆராய்ந்தறி கவிதை**
**சொல்லும் இருவரிடைத் தோன்றியயான்—முல்லை**
**அரும்பில் பொலியும் அணிமுறுவல் நல்லாய்**
**கரும்பில் கணுநிகர்த்தேன் காண்"**

என வருந்திப் பாடினுர்.

கொங்குவேளிர் என்பார் தாம் பாடிய பெருங்கதை என்னும் நூலில் கள்ளின் வகைகள் பலவற்றைக் கூறு கின்ருர். காஞ்சித் தெளிவு, தெங்கின் ஊறல், தேம்பிழி தேறல், புதுமலர் வேரி என்பவற்ருேடு கரும்பின் ஊறல் எனவும் ஒன்றனைக் காட்டுகின்ருர். கரும்புச் சாற்றி னின்று எடுக்கப்படும் கள் கரும்பின் ஊறல் எனப்படும். உசிலம்பட்டை அல்லது முருக்கம் பட்டையினின்று எடுக்கப்படும் கள் சிக்கரத்தெளியல் எனப்படும்.

அழகியசொக்கநாதர் என்னும் புலவர் மயிலையும் கரும்பையும் வைத்து இரட்டுற மொழிதலாக ஒரு பாடல் பாடியுள்ளார். கரும்பின் உடலில் கணு உள்ளது, மயிலுக்கும் தோகையில் கண் உள்ளது. கரும்பு மன் மதனுல் விரும்பப்படுகின்றது. மயிலும் முருகப்பெருமா னுல் விரும்பப்படுகின்றது. கரும்பும், மயிலும் தோகை பெற்றுள்ளன. காற்று வீசுவதால் கரும்பு அசைந்தாடு

கின்றது. மயிலும் மழைகண்டு களிநடம் புரிகின்றது. ஆகவே கரும்பும், மயிலும் ஒப்பாகும். இக்கருத்தினைக் கொண்ட பாடலைக் காண்போம்.

**'' மேனியெலாம் கண்ணுறலால் வேள்விரும்பும் தன்மையினால்**
**ஆனபசுந் தோகையினால் ஆடலினால்—மீனவன்நேர்**
**மானபரா நெல்லைநகர் வாழுமுத்து சாமிமன்னா**
**கானமயில் ஒப்பாம் கரும்பு.''**

நீர்வளமிக்க நாட்டினில் நெற்பயிர் கரும்பு போலும், கரும்பு கமுகுபோலும் தோற்றமளிக்குமாம். 'கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன' என்பது சேக்கிழார் திருவாக்காகும். பாரனைத்தும் பொய்யென ஒதுக்கித் துறவு பூண்ட பட்டினத்துப்பிள்ளையார் ஒற்றியூர்ப் பெருமானைத் தித்திக்கும் கரும்பாகக் காட்டுகின்றார்.

**'' கண்டங் கரியதாம் கண்மூன்று உடையதாம்**
**அண்டத்தைப் போல அழகிதாம்—தொண்டர்**
**உடலுருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்**
**கடலருகே நிற்கும் கரும்பு.''**

தமிழர் திருநாளாம் பொங்கல் திருநாளில் மஞ்சளொடும், இஞ்சியொடும், இனிக்கும் கரும்பும் பங்கு கொள்ளுதலை அறியாதார் யார்?

'சோழ வளநாடு சோறுடைத்து' என்பது புலவர் வாக்கு சோணாட்டு வளத்தினைச் 'சோற்றால் மடையடைக்கும் சோணாடு' எனவும் சிறப்பித்துக் கூறுவர். திருமுனைப்பாடி நாட்டுவளம் பேசும் சேக்கிழார் பெரு

மான் ஆறுபோலப் பெருகிவரும் கரும்பின் சாறு மடையினை உடைப்பதாகவும், அவ்வெள்ளத்தைக் கரும்பின் கட்டியால் அடைப்பதாகவும் பேசுகின்றார். அவர் பாடலைக் காண்போம்.

"கடைஞர்மிடை வயற்குறைத்த
கரும்புகுறை பொழிகொழுஞ்சாறு
இடைதொடுத்த தேன்கிழிய
இழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபுரந்து ஞிமிறு ஒலிப்பப்
புதுப்புனல்போல் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட்டியின்
அடைப்ப ஊர்கள்தொறும்."

புதுமணம் புரிந்துகொண்ட கோவலன்,

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே"

எனக் கண்ணகியைப் பாராட்டுந் திறத்தினை இளங்கோவின் சொற்கள் நமக்குக் காட்டும். இவ்வாறு, கரும்பு தமிழிலக்கியங்களில் பலவாறு பேசப்படுதலை ஓரளவு இக்கட்டுரையின் வாயிலாகத் தெரிந்துகொண்டோம்.



# 4. திலகவதியார்

பெரியபுராணம் எனப்படும் திருத்தொண்டர் புராணத்துள் இசைஞானியார், காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார் என்னும் மூன்று பெண் பாலர்க்குத் தனித்தனியே புராணங்கள் உள்ளன. மங்கையர்க்கரசி யார் வரலாறு தனியே மூன்று பாடல்களில் பேசப்படுவ தோடன்றி, திருஞானசம்பந்தர் புராணத்துள்ளும் விரி வாகக் கூறப்படுகின்றது. இசைஞானியார் புராணம் ஒரு பாடலே மட்டுமே கொண்டுள்ளது. காரைக்காலம்மை யார் வரலாறு அறுபத்தாறு பாடல்களில் விளக்கப்பெறு கின்றது. ஆனல், திருநாவுக்கரசரின் தமக்கையார் திலக வதியாருக்குத் தனியே புராணமில்லை. நாணயத்திற்கு இருபக்கங்கள் இருப்பது போன்று, திருநாவுக்கரசர் புராணத்தின் ஒரு பகுதியாகவே திலகவதியார் வரலாறும் பேசப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம். திலகவதியாரது வாழ்க்கை நெறியே திருநாவுக்கரசரைச் செம்மைப்படுத் தியது என்னும் உண்மையினைப் பெரிய புராணத்தினை ஆழ்ந்து பயில்வோர் நன்கு உணர்வர்.

திலகவதியார் தோன்றிய திருமுனைப்பாடி நாடு மண்ணின் துகளன்றி வேறு துகளில்லாத குடிவளம் நிறைந்தது பெண்ணையாறு பாய்வதால் நீர்வளமும் நிறைந்தது. நிலவு தவழும்படியான உயர்ந்த மாடங் களைக் கொண்ட அந்நாட்டில், கரும்பின் கணுக்களில்

தேன் பொழியும். வாய்க்கால்களில் தகடு போன்ற வரால் மீன்கள் துள்ளிப்பாயும். இல்லங்களில் எப்பொழுதும் விருந்தினர் நிறைந்திருப்பர். அறந்தரு நாவுக்கரசும், ஆலால சுந்தரரும் பிறந்தருளிய திருமுனைப் பாடி நாட்டின் பெருமை நம்மால் எடுத்துரைக்கும் அளவினதன்று.

வளம் பல நிறைந்த திருமுனைப்பாடி நாடு மேன்மை பொருந்திய பல ஊர்களைக் கொண்டது. அவற்றுள் தெய்வ மணங்கமழும் திருவாமூரில் வேளாளர் குலத்தில் குறுக்கையர் என்னுங் குடி சிறந்து விளங்கியது. இக்குடியில் உறவினரைப் பாதுகாப்பதிலும், விருந்தினரைப் பேணுவதிலும் தலைசிறந்து விளங்கிய பெரியார் புகழனார் என்பவர்க்கும், அவரது மனைவியார் மாதினியார் என்பவர்க்கும் செம்மலர்மேல் திருவனைய திலகவதியார் தோன்றினார். இவர் தோன்றிய சில ஆண்டுகட்குப் பின் அவநெறி மாய்ந்து தவநெறி தழைத்தற்கு, ஒளி விளங்கு கதிரவன் போல் மருணீக்கியார் பிறந்தார்.

திலகவதியாரது அன்னையார் பெயரோ மாதினியார் என்பதாகும். உயர் பண்புகளைக்கொண்ட பெண்டிருள் இனியவர். தந்தையாரோ புகழ் தரத்தக்க செயல்களைச் செய்துவாழும் புகழனார் ஆவார். இவ்விருவர்க்கும் மகளாராகத் தோன்றிய திலகவதியார் நற்பண்புகளின் உறைவிடமாக இருந்ததில் வியப்பில்லை. திலகவதியார்க்குப் பன்னிரண்டு வயது ஆயிற்று. இந்நிலையில், பேரழகு வாய்க்கப்பெற்ற கலிப்பகையார் என்பார் திலகவதியாரைத் தாம் மணம் புரிய விழைந்து, பெரியோர் சிலரைப் புகழனார் பால் செலவிடுத்தார். கலிப்பகையார்

அரசன்பால் அன்பும், அவர்க்கு உற்றுழி உதவும் பண்பும் வாய்ந்தவர் சிவபெருமானிடத்தும் மெய்யன்புடையா ராக விளங்கினர். புகழனரும், கலிப்பகையாரது குண நலமும், குலநலமும் அப்பெரியோர் வாயிலாக உணர்ந்து திலகவதியாரை அவர்க்கே அளிப்பதாக உவகையுடன் உடன்பட்டார்.

புகழனரது உடன்பாட்டினை அறிந்த கலிப்பகை யாரும் மகிழ்ச்சியுடன் திருமண முயற்சியில் ஈடுபட் டார். 'ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்ருகும்' என்பது போன்று, வடநாட்டு மன்னர் சிலர் இவர் நாட்டின்மீது படையெடுத்து வந்தனர். அரசனும் கலிப் பகையாரை அழைத்துப் போர்மேற் செல்லுமாறு ஏவினன். அரசன் ஆணையேற்ற கலிப்பகையாரும் நெடுநாள் தங்கிக் கொடும்போர் புரிந்தார். கலிப்பகை யார் போரில் ஈடுபட்டிருக்கும் வேளையில், திலகவதி யாரின் தந்தையார் நோயினல் இறந்துபட்டார். தம் கணவரது பிரிவாற்ருத மாதினியார் சுற்றமுடன் மக் களையும் துகளாகவே நீத்துக் கற்புநெறி வழுவாமல் கணவனுருடன் சென்ருர். தாய் தந்தையரை ஒருசேர இழந்த திலகவதியாரும், மருணீக்கியாரும் செய்வதறி யாது துயரில் மூழ்கினர். பின், சுற்றத்தார் தேற்ற ஒரு வாறு மனந்தெளிந்து பெற்ருேர்க்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களை வழுவாது ஆற்றினர். இந்நிலையில், போருக்குச் சென்ற கலிப்பகையார் பகைவருடன் பொருது வீரமரணம் அடைந்தார். இதனைச் சேக்கிழார் பெருமானும், "பொருவாரும் போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார்" எனப் பேசுகின்ருர்.

கலிப்பகையார் போரில் பகைவரை அழித்து உயிர்துறந்த செயலைப் பலருங் கூறத் திலவதியார் கேட்டுத் தீராத் துயர் கொண்டார். "எந்தையும் எம் அனையும் அவர்க்கு எனைக் கொடுக்க இசைந்தார்கள். அந்த முறையில் அவர்க்கே உரியது நான். ஆதலினால் இந்த உயிர் அவரோடு இசைவிப்பன்" எனக்கூறி உயிர்விடத் துணிந்தார். 'தாயைப் போலப் பிள்ளை நூலைப்போல் சேலை' என்னும் மொழிக்கேற்ப, தாயினுடைய பண்பு மகளிடத்தும் அமைந்திருப்பது இயல்பேயாகும். மணமுடிக்க இசைந்திருந்த அளவில், தமக்கென்று பேசப்பட்டவர் இறந்துபடவே, அவருக்காகத் தாமும் உயிர்விடத் துணிந்த திலகவதியாரின் பெருமையினை என்னென்பது?

தமக்கையார் உயிர்விடத் துணிந்த நிலைகண்ட மருணீக்கியார் விரைந்து சென்று அவரது திருவடிகளில் வீழ்ந்து "தாயும் தந்தையும் மறைந்த பின்னும், நான் உயிர் வாழ்ந்திருப்பது உம்மை வணங்கப் பெறுவதனாலாகும். நீயும் என்னைவிட்டுப் போகத் துணிந்தால் உமக்குமுன் நான் உயிர் துறப்பேன்" எனக் கூறினார். இம்மொழிகளைக் கேட்ட திலகவதியார், தம்பியார் நிலை கண்டு இரங்கினார். அவர் வாழவேண்டுமென்னும் உறுதி கொண்டு, தாமும் அவர்க்காக உயிர்வாழத் துணிந்தார். இதனைச் சேக்கிழார் பெருமான் கீழ்வரும் பாடலில் அழகுற விளக்குகின்றார்.

"தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயா
உம்பருலகு அணையவுறு நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும்
அருள்தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதியார் இருந்தார்."

திலகவதியார் உயிர் துறந்திருப்பின் அப்பர் பெருமான் தொண்டு நெறியினையும், அவரது பாடல் சுவையினையும் நாம் ஒருநாளும் அறிந்திருக்க முடியாது. ஆகவே, அப்பரடிகளை உலகிற்கு அளித்த பெருமை திலகவதியாரையே சாருமென்னலாம்.

தன்னைக் கொல்லுதற்கு இராமபிரானைத் துணையாகப் பெற்றுச் சுக்கிரீவன் வந்துள்ளானெனத் தாரையின் வாயிலாகக் கேட்ட வாலி, இராமனது பெருமையினைப் பின்வருமாறு பேசுகின்றான்.

> "தம்பிய ரல்லது தனக்கு வேறுயிர்
> இம்பரில் இலதென எண்ணி ஏய்ந்தவன்
> எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரிடை
> அம்பிடை தொடுக்குமோ அருளின் ஆழியான்"

என்பது வாலியின் வாக்காகும். தம்பியரைத் தன்னுயிரெனப் பேணிப் பாதுகாத்த இராமனது கருணைத் திறத்தினைத் திலகவதியாரிடத்தும் கண்டு மகிழலாம்.

திலகவதியார் உயிர்வாழ இசைந்தது அறிந்த மருணீக்கியார் மனவருத்தம் நீங்கப் பெற்றவரானார். உலகின் நிலையாமையை நன்குணர்ந்து அறச்செயல்கள் செய்தற்கு விழைந்தார். அறச்சாலைகளும் தண்ணீர்ப் பந்தல்களும் அமைத்தார். வேண்டுவார்க்கு வேண்டுவன உவந்தளித்தார். விருந்தினரைப் பேணியும், நாவலர்க்கு வளம் பல நல்கியும் வாழ்ந்து வந்தார். இவ்வாறு, அறச் செயல்களில் தமது செல்வமனைத்தும் முற்றத்துறந்த மருணீக்கியார் கொல்லா நோன்பு கொண்ட சமண சமயமே சிறந்த சமயமென்று கருதி, சமண முனிவர்

நிறைந்து வாழும் பாடலிபுரத்திற்குச் சென்ருர். சமணப் பெரியாரும் அவரை மகிழ்வுடனேற்றுத் தம் சமய நூல்கள் பலவற்றையும் உணர்த்தினர். மருணீக்கி யாரும் சமண சமய உண்மைகளை நன்குணர்ந்து சமண ராகித் 'தருமசேனர்' என்னும் பெயரையும் பெற்ருர். பௌத்தரையும் வாதில் வென்று சமணத் தலைவராய்த் திகழ்ந்தார்.

இந்நிலையில், தவநெறி மேற்கொண்டொழுகும் திலகவதியார் சிவபெருமானது திருவருளைப் பெறுதற் குப் பெரிதும் விழைந்தார். ஆகவே, சுற்றத்தாருடன் கூடி வாழும் நிலையினின்று நீங்கிக் கெடில நதியின் வடகரையில் இருக்கும் திருவதிகை என்னும் திருத் தலத்தை அடைந்தார். அங்குள்ள இறைவனை வணங் கியும், சிவசின்னங்களைத் தாங்கியும் திருப்பணிகள் பல செய்து வந்தார். இவர் செய்த திருப்பணிகளைச் சேக் கிழார் திருவாக்கில் காணலாம்.

**"புலர்வதன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற**
**நலமலிஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு**
**மலர்கொய்து கொடுவந்து மாலைகளும் தொடுத்தமைத்துப்**
**பலர்புகழும் பண்பினுல் திருப்பணிகள் பலசெய்தார்."**

இவ்வாறு திருத்தொண்டு புரிந்துவாழும் திலகவதி யார் உள்ளத்து ஒரு வருத்தம் இருந்து வந்தது. தமது தம்பியார் பிறசமயம் சார்ந்து வாழ்தலை நினைந்து வருந் தினர். ஆகவே, தாம் வழிபடும் சிவபெருமானைத் தொழு திறைஞ்சி, "பெருமானே! என்னைத் தொண்டு கொண் டருள்வீராயின் எனது தம்பியினையும் பிற சமயத்தினின்

றும் ஏற்றருளிக் காத்தல் வேண்டும்'' எனப் பலமுறையும் பணிந்து வேண்டினர். திலகவதியாரது வேண்டுகோட்கு இரங்கிய பெருமான் ஒருநாள் அவரது கனவில் தோன்றி, ''சூலைநோய் கொடுத்து அவனை ஆட்கொள்வோம்'' என்று அருளிச்செய்தார்.

திலகவதியாருக்குக் கூறிய வண்ணமே தரும சேனரை ஆட்கொள்ளவேண்டிச் சிவபிரானும் அவர்க்குச் சூலைநோய் அருளினர். வடவைத்தீயும், கொடுவிடமும், வச்சிராயுதமும் ஒன்று சேர்ந்து வந்ததுபோல் சூலைநோய் தருமசேனரது வயிற்றில் புகுந்து குடைந்து பெரிதும் வருத்தியது. வயிற்றில் நோய் வருத்தவே தருமசேனர் சிறிதும் ஆற்றாது நிலத்தில் வீழ்ந்தார். தாம் கற்றுணர்ந்த சமணசமய மந்திரங்களினல் நோயைத் தடுக்க முயன்ருர். நோய் தணியவில்லை. இதுகண்ட சமணர் பலரும் ஒன்றுசேர்ந்து நோயினைப் போக்கும் வழியறியாது திகைத்து, மயிற்பீலி கொண்டு உடல் முழுவதும் தடவினர். அப்பொழுதும் நோய் தணியாது வருத்தியது.

நோயின் துன்பம் மிகவே தரும சேனருக்குத் திலக வதியாரின் நினைவு எழுந்தது. ஆகவே, பணியாளை அழைத்துத் தம் துன்பத்தினைத் தமக்கையார் பால் சென்று கூறிவருமாறு ஏவினர். தருமசேனர் ஏவலால் புறப்பட்டுவந்த பணியாளனும் திலகவதியாரைத் திரு நந்தனவனத்தின் புறத்தே கண்டு, ''யான் உமது தம்பி யார் ஏவலினல் வந்துள்ளேன்'' எனக் கூறத் திலக வதியாரும் ''தீங்குளவோ?'' என வினவினர். ''தங்கள் தம்பியாரைச் சூலைநோய் மிகவும் வருத்துகின்றது. இதனை

உம்மிடத்து எடுத்துரைத்துத் தாம் உய்யும் வழியினைக் கேட்டு, இன்றிரவே திரும்பி வருமாறு அவர் பணித்தார்'' எனப் பணியாள் கூறியது கேட்ட திலகவதியார், ''யான் அங்கு நண்ணுகிலேன். இதனை அவனிடம் சென்று உரைப்பாயாக'' என விடையிறுத்தார்.

தமக்கையாரின் மறுமொழி கேட்ட தருமசேனர், திருவதிகை சென்று திலகவதியாரின் திருவடிகளைச் சேர்தலே நன்றெனக் கருதினார். ஆகவே, சமண சமயக் கோலத்தை விடுத்து எவரும் அறியாதவாறு இரவில் திலகவதியார் வாழும் திருமடத்தினைச் சென்றடைந்தார். தமக்கையாரைக் கண்டு அவர் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, ''நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயனனையீர்! கொடுஞ் சூலை நோயால் யான் துன்புறுகின்றேன். என் துயர் களைந்து அருளவேண்டும்'' என வேண்டினார். ''இது இறைவனுடைய திருவருளேயாகும். ஆகையால், தம்மையடைந்தாரது பற்றறுக்கும் பெருமானை வணங்கிப் பணி செய்வீர்'' எனக் கூறித் திருவைந்தெழுத்தினை ஓதித் திருநீறு கொடுத்தார் திலகவதியார். திருநீற்றினைப் பெற்றவர் தமக்குப் பெருவாழ்வு வந்ததென உரைத்துத் தம் திருமேனியில் அதனைப் பூசிக்கொண்டு திலகவதியார் பின்சென்றார்.

திருப்பள்ளியெழுச்சிக் காலத்தில் கோயிலில் தாம் வழக்கம்போல் செய்துவரும் திருத்தொண்டு செய்தற்குச் செல்லும் திலகவதியார் தம்பியாரையும் உடனழைத்துச் சென்றார். கோயிலினுள் சென்ற மருணீக்கியார் தம் மாயை அகலுமாறு நிலத்தில் விழுந்து கும்பிட்டு,

" கூற்ருயினவாறு விலக்ககலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்ருயடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்ருது என்வயிற்றி னகம்படியே
குடரோடு தொடக்கி முடக்கிட
ஆற்றேன் அடியேன் அதிகைக்கெடில
வீரட்டானத் துறை அம்மானே!"

எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினுர். சூலை நோயும் அப்பொழுதே அகன்றது இறைவனுடைய திருவருளினுல், " செந்தமிழின் சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினுல், நாவுக்கரசென்று உலகேழினும் நின் நன்னுமம் நயப்புற மன்னுக" என்னும் வாக்கு வானில் எழுந்தது, அன்றுமுதல் தருமசேனர் திருநாவுக்கரசரானுர்.

திலகவதியாரது திருத்தொண்டினைக் கண்ணுரக் கண்ட திருநாவுக்கரசர் ஆரூர்ப் பதிகத்தில்,

" நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை
புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும்
ஆரூரா என்றென்றே அலருநில்லே"

எனப் பாடுகின்ருர். இவ்வாறு, திலகவதியாரின் திருத்தொண்டு நெறியே அப்பர் பெருமானை உழவாரப்படை

தாங்கித் தொண்டின் நெறி செல்லத் தூண்டியதென்ன லாம். "என்கடன் பணிசெய்து கிடப்பதே" எனக் கூறியதோடமையாது செயல்வீரராகவும் திகழ்ந்த திரு நாவுக்கரசரை உலகிற்களித்து அழியாப் புகழ் பெற்றார் திலகவதியார்.

தம்மைச் செந்நெறிப்படுத்திய திலகவதியாரை "ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்" வந்து இறைவன் ஆட்கொண்டதாகத் திருப்பாதிரிப்புலியூர்ப் பதிகத்தில் திருநாவுக்கரசர் பாடிப் பரவுகின்றார்,



# 5. மதுரை மாநகர்

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும்
சௌந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டி வளநாடு" பண்டைப் பெருமை நிறைந்ததென்பர் சான்றோர் "நற்றுறை மாந்தர் போற்றும் பார்மன்னு தொன்மைப் புகழ் பூண்டது பாண்டிநாடு" என்பது சேக்கிழார் திருவாக்கு. இந்நாட்டின் பெருமை சிலப்பதிகாரத்திலும் எடுத்துப் பேசப்படுகின்றது. பாண்டிநாடு செந்தாமரை மலராகவும், மதுரை மாநகர் அம்மலரில் திருமகள் வாழும் பொகுட்டாகவும் விளங்குவதாக ஒரு புலவர் எடுத்துரைக்கின்றார். கூடல், ஆலவாய், கடம்பவனம், கன்னிபுரம், துவாதசாந்தத்தலம் முதலான பலவேறு பெயர்களையும் கொண்டது இந்நகர். புலவர் பலரும் கூடித் தமிழ் ஆராய்ந்ததால் கூடல் என்னும் பெயர் பெற்றது நான்மாடக் கூடல் என்னும் பெயர் அமைந்ததற்கு வேறு வரலாறும் உள்ளது.

பரஞ்சோதி முனிவர் பாடியருளிய திருவிளையாடற் புராணம் மதுரையின் சிறப்பினைப் பலவாறு விளக்குதலைக் காணலாம். மங்கலம் நிறைந்த பாண்டி நாடென்னும் நங்கைக்குத் திருமுகம் மதுரையாம். தில்லையைத் தரிசிக்க முத்தி; காசி நகரில் வதிந்து இறக்க முத்தி; திருக்காளத்தியினைப் பத்தினால் வழிபாடு செய்வோர்க்கு

முத்தி; ஆனல், அறம் தழைக்கும் மதுரை செவியால் கேட்ட அளவிலேயே போகமும், பிறந்திறவாப் பேரின்பமும் அளிக்கும். காசி முதலான நகரங்கள் மறுமையில் வீடுபேறு அளிக்கும். ஆனல் திருவாலவாய் எனப்படும் மதுரையோ உலகில் வாழ்ந்துகொண்டிருக்கும் பொழுதே சீவன் முத்தி தரும். ஆகவே, இந்நகர் சீவன் முத்திபுரம் எனவும் அழைக்கப்படும். இத்தலத்தை விட்டுப் பிற தலங்களுக்குச் சென்று வழிபடுவோர் அமிழ்தம் போல் இனிக்கும் தீம்பாற்சோறு கையிலிருக்க, அதனை ஒதுக்கிப் புறங்கையைச் சுவைப்போருக்குச் சமமாவர். கங்கை, காவிரி, காளிந்தி, வாணி, கிருஷ்ணை, துங்கபத்திரை, பாலாறு, பொருநை முதலான நதிகள் பலவற்றிலும் நீராடுவதால் பெறும் பயனை மதுரையில் வாழ்வோர் நாடோறும் பெறுவரெனில் இத்தலத்தின் பெருமையை என்னென்பது? மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்புக்களும் மதுரையில் அமைந்துள்ளன. "அலகிலா விளையாட்டுடையார்" என இறைவனைக் கம்பர் குறிக்கின்ருர். மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரப்பெருமான் செய்தருளிய திருவிளையாடல்கள் அறுபத்துநான்கனைக் கூறுவதே திருவிளையாடற் புராணமாகும்.

மதுரையின் சிறப்பினைப் பல நூல்கள் பேசுதலைக் காணலாம். பத்துப்பாட்டுள் ஒன்ருகிய மதுரைக் காஞ்சி என்னும் நூல் பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனுக்கு உலக நிலையாமையை உணர்த்துதற்கென்று மாங்குடி மருதனர் என்னும் புலவரால் பாடப்பட்டது. இந்நூல் மதுரை நகர் குறித்துக்

கூறுதலைக் காண்போம். பாண்டியற்குரிய பல பெயர்களுள் பஞ்சவன் என்பதும் ஒன்ருகும். ஐவகை நிலவளனும் பாண்டி நாட்டில் அமைந்திருத்தலால், பாண்டியன் பஞ்சவன் எனவும் அழைக்கப்படுகின்ருன். பாடல் சான்ற பாண்டிநாட்டு நடுவண் மதுரை நகர் பொலிவுடன் திகழ்கின்றது.

வையையாற்றின் கரையினில் பெரும்பாணர்களின் குடியிருப்புக்கள் அமைந்துள்ளன. மண்ணுள்ள அளவும் ஆழ்ந்துள்ள நீரையுடைய கிடங்குகளும், விண்ணுற ஓங்கிய மதில்களும், வலிமை மிகுந்த வாயில்களும், மேகந்தவழும் மலை போன்று உயர்ந்த மாடங்களும் பெற்று விளங்குகின்றது மதுரை மாநகர்.

தெருக்களின் சிறப்பு "ஆறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு" எனக் குறிக்கப்படுகின்றது. பல்வேறு மொழிகளைப் பேசும் மக்களை அங்காடித் தெருக்களில் காணலாம். கோயில்களில் விழாக்களை நடத்திக் கட்டப் பெற்ற அழகிய கொடிகளும், படைத்தலைவர் அரசன் ஏவலால் சென்று பெற்றுவந்த வெற்றியின் பொருட்டு நாடொறும் எடுத்த வெற்றிக்கொடிகளும், கள்ளினது களிப்பு மிகுதியைச் சாற்றும் கொடிகளும், கல்வி, கொடை, தவம் முதலான நற்செயல்களுக்காக எடுக்கப்பெற்ற கொடிகளும் மதுரையின்கண் அருவிகள் போன்று அசைகின்றன.

மதுரைக் கடைத்தெருக்களில் நறுமணம் கமழும் பூக்களைப் பூந்தட்டில் வைத்துச் சிலர் விற்பர். பலவகையான மாலைகளை விற்பர் சிலர். பன்னிறங்கொண்ட

நறுமணமுடைய பொற் சுண்ணங்களை விற்பர் சிலர். வேறு சிலர் பாக்குடன், வெற்றிலையும், சங்கு சுடுதலால் உண்டான சுண்ணும்பும் விற்பர். பல்வேறு பண்ணியங்களை நகர்முழுதும் சுற்றி விற்பர் சிலர். மதுரை நகரிலுள்ள கோயில்களில் திருவிழாக்கள் இனிது நடைபெறுகின்றன. மேகம் போன்று வரையாமற் கொடுக்கும் செல்வரும், பூந்தொடி மகளிரும் விழாக்களைக் காணச் செல்கின்றனர். பெண்டிர் தமது கணவருடனும், குழந்தைகளுடனும் இறைவனை வழிபடச் செல்கின்றனர்.

அறங்கூறவையம் சிறந்த முறையில் மதுரையில் செயலாற்றி வந்தது. சமன்செய்து சீர்தூக்கும் கோல் போல் நடுவுநிலையுடையதாய் அறங்கூறவையம் விளங்கியது.

> " அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
> செற்றமும் உவகையும் செய்யாது காத்து
> ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்
> சிறந்த கொள்கை அறங்கூறு அவையம் "

என்று அறங்கூறவையத்தின் சிறப்பு கூறப்படுகின்றது.

மதுரையில் இருந்த நல்லமைச்சரின் சிறப்பு கீழ்க் காணுமாறு பேசப்படுகின்றது.

> " நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி
> அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
> பழிஒரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
> செம்மை சான்ற காவிதி மாக்கள் "

இப்பகுதிக்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையினைக் காண்போம். " அரசனிடத்துள்ள நன்மையும், தீமையும்

நெஞ்சத்தாலே கண்டு, அத்தீங்குகளை ஆராய்ந்து, அவற்றிலே ஒழுகாமலடக்கி, சுற்றத்திடத்துச் செல்லும் அன்பும், எவ்வுயிர்க்கண்ணும் நிகழும் தருமமும் ஒரு காலமும் போகாமல் தம்மிடத்தே பரிகரித்து, பழி தம்மிடத்து வாராமல் நீக்கி அதனுனே ஏனையோரினும் உயர்ச்சியெய்தி, பரந்த புகழ் நிறைந்த தலைமையமைந்த காவிதிப் பட்டங் கட்டின அமைச்சர்''.

மதுரை நகரில் அறுக்கப்பட்ட சங்கினை வளையல் முதலியனவாகக் கடைந்து தருவர் சிலர்; அழகிய மணி களுக்குத் துளையிடுவர் சிலர்; பொன்னை உரைத்து மாற்றுக் காண்பர் சிலர்; பூவும் புகையும் விற்பர் சிலர்; நோக்கினுர் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்தும் அரிய ஓவியம் வரைவோரையும் அங்குக் காணலாம். குறியவும் நெடியவுமாகிய மடிப் புடவைகளை நால்வேறு தெரு வினும் நின்று விற்பர் சிலர்.

மதுரையில் சோறிடும் சாலைகள் பல இருந்தன. மா, பலா, வாழை, முந்திரி முதலான கனிகளையும், பாகற்காய், வழுதுணங்காய், வாழைக்காய் முதலான காய்வகைகளையும், இலைக்கறிகளையும், ஊன் கலந்த சோற்றையும், பலவகைக் கிழங்குகளையும், பாற்சோற் றையும் அச்சாலைகளில் படைப்பர்.

அணிகலன்களைத் திருடுதற்கு இடம்பார்த்துத் திரிப வரும், விழித்த கண் இமைக்கும் அளவில் மறைபவரு மாகிய கள்வர் வாழும் இடத்தினை நன்கு தெரிந்து கொண்டு, வயக்களிறு பார்க்கும் வயப்புலி போன்று வாழும் ஊர்க்காவலர் பலர் மதுரையில் இருந்தனர்.

அவர்கள் துஞ்சாக் கண்ணர் ; அஞ்சாக் கொள்கையர் ; மழையால் தெருக்களில் நீர் நிறைந்து ஓடினும், கடமை வழுவாது ஊரைப் பாதுகாத்து வந்தனர்.

"அளந்துகடை யறியா வளங்கெழு தாரமொடு
மிக்குப் புகழெய்திய பெரும்பெயர் மதுரை"

என்று மதுரையின் பெருமையினை மேலும் கூறிச் செல்கின்றது மதுரைக்காஞ்சி.

பத்துப்பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப் படை நக்கீரரால் பாடப்பெற்றது. முருகப்பெருமானது தண்ணருளையும், அவனுக்குரிய அறுபடை வீடுகளையும் விளக்கும் இந்நூல் மதுரைச் சிறப்பினையும் கூறிச் செல்கின்றது. "பாண்டியரின் தலைநகர் மதுரையின் வாயிலில் பகைவரைப் போருக்கு அழைப்பது போன்று மீனக் கொடிகள் உயர்ந்து விளங்குகின்றன. கோட்டை வாயிலில் வரிந்து கட்டப்பெற்ற பந்துகளும், பாவைகளும் தொங்கவிடப்பட்டுள்ளன. பகைவரைப் பெண்டிராகக் கருதி, அவர்கள் விளையாடுதற்கென்று பந்துகளும், பாவைகளும் உள்ளனவாம். வீரம் செறிந்த பாண்டியர்க்குப் பகைவர் இலராகி ஒழிந்தமையால், போரின்றி அமைதி தவழும் கோட்டை வாயிலை மதுரை பெற்றுத் திகழ்கின்றது. திருமகள் இனிது வீற்றிருக்கும் மதுரையில் அங்காடி வீதிகளும், மாட மாளிகைகள் நிறைந்த தெருக்களும் காணப்படும். இத்துணைச் சிறப்பு வாய்ந்த மதுரையின் மேற்கில் திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது".

"செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகில் கூடல்"

இவ்வாறு நக்கீரர் பாடுகின்றார்.

வடநாட்டில் ஒருமுறை பஞ்சம் வந்தகாலை, அந் நாட்டினின்று தென்னாடு நோக்கி வந்த பலர் பாண்டியனைத் தஞ்சமாக அடைந்தனர். அவர்கள் வேற்றுச் சமயத்தைச் சார்ந்தவராயினும், பாண்டியன் உண்டியும் உறையுளும் கொடுத்து உபசரித்தான். அரசனது நன் மதிப்பை மேலும் பெறுதற்குத் தமிழ்மொழியினை நன்கு பயின்று புலமை மிக்கு விளங்கினர். அவர்கள் மதுரையைச் சூழ்ந்துள்ள எட்டு மலைகளைத் தமது இருப்பிடங்களாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அம்மலைகள் இவையெனக் கீழ்வரும் பாடல் தெரிவிக்கின்றது.

பரங்குன்று ஒருவகம் பப்பாரம் பள்ளி
அருங்குன்றம் பேராந்தை ஆனை - இருங்குன்றம்
என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டு மோபிறவித் தீங்கு.

அவர்கள் எழுதிய பாடல்களினின்று தெரிந்தெடுக்கப் பட்ட செய்யுட்களைக் கொண்ட நூலே நாலடியாராகும்.

உலகனைத்தும் வாடினும் தான் வாடாத தன்மையினைக் கொண்ட மதுரை நகரை ஒரு தராசுத் தட்டிலும், உலகப் பொருள்களனைத்தையும் மற்றொரு தட்டிலும்

வைத்தால் மதுரையுள்ள தட்டுத் தாழ்ந்து காணப்படு மாம். இவ்வாறு, மதுரை நகர்ச் சிறப்பினைப் பரிபாடல் பகர்கின்றது. இந்நூல் மேலும் கூறுதலைக் காண்போம். ''ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும் மதுரை, மாயோன் கொப்பூழில் மலர்ந்த தாமரை மலர்; அடுக்கடுக்காகவுள்ள அழகிய தெருக்கள் தாமரையின் இதழ்கள்; மலர் நடுவண் இருக்கும் பொகுட்டு ஆல வாய்ப் பெருமான் கோயில்; நகர்க்கண் வாழும் மக்கள் மலரின் கண்ணுள்ள மகரந்தம்; பரிசில் பெறும் புலவர் வண்டினம்.'' இம்மட்டோ? பொதியம் உள்ளளவும் நிலைபெற்று வாழும் மதுரை செய்யாட்கிழைத்த திலகம் போல் விளங்குகின்றதாம்.

இந்திரனது அணிகலன்கள் நிறைந்த பெட்டியைத் திறந்து வைத்தாற்போன்றது மதுரையின் உள்ளமைப்பு.

> "ஆயிரங் கண்ணோன் அருங்கலச் செப்பு
> வாய்திறந் தன்ன மதிலக வரைப்பு"

எனப் பேசும் சிலப்பதிகாரம் மதுரையில் நுதல்விழி நாட்டத்து இறைவன் கோயில் முதலாகப் பல கோயில் கள் இருத்தலைக் கூறுகின்றது, சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொன்னும் விற்கும் கடைத்தெரு; நூலினும், மயிரினும், நுழைநூல் பட்டினும் நன்கு நெய்யப்பட்ட துணிகள் நிறைந்த அறுவை வீதி; கூலவீதி முதலான பலவகைத் தெருக்கள் மதுரையில் இருந்தனவாம்.

பாவை பாடிய வாயால் திருக்கோவையும் பாடிய மாணிக்கவாசகர் ''உயர் மதில் கூடலின் ஆய்ந்த

ஒண்தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனேயோ'' என மதுரையில் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்ததைக் குறிக்கின்றார். 'செய்யுள் மிக்கேறு சங்கம்', 'மேதகைய பலகலை போர்த்து அறம் வளரும் தமிழ்க்கூடல்', 'தமிழ் மதுரை' என்னும் தொடர்கள் மதுரைக்கும் தமிழுக்குமுரிய நெருங்கிய தொடர்பினைக் காட்டுகின்றன. பாட்டுக்கு உருகும் தமிழ்ச் சொக்கநாதர் சங்கப்புலவருள் தாமும் ஒருவராக இருந்து தமிழ் வளர்த்தார்.

"பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை"

என்று தமிழ் வளர்ந்த வரலாற்றைச் சுவையுடன் கூறுகின்றார் ஒரு புலவர்.

குமரகுருபரர் என்னும் செந்தமிழ்ப் புலவர் மதுரையின்கண் எழுந்தருளியிருக்கும் அங்கயற்கண்ணம்மையினைச் சிறப்பித்துப் பிள்ளைத் தமிழ் ஒன்று பாடியுள்ளார். தெய்வநலம் கனிந்த இந்நூலின் அரங்கேற்றம் திருமலை நாயக்கர் முன்னிலையில் நடைபெற்றது. ''தொடுக்கும் கடவுள் பழம்பாடல்'' எனத் தொடங்கும் வருகைப் பருவப் பாடலைக் கூறிப் பொருள் விளக்கம் செய்யுங்காலை, மீனாட்சியன்னை மன்னன் மகளாகத் தோன்றிப் புலவர் கழுத்தில் முத்துமாலை அணிவித்ததாக ஒரு வரலாறு உள்ளது. முத்தப்பருவப் பாடல் ஒன்றினைக் கூறும் பொழுது இந்நிகழ்ச்சி நடந்ததாகவும் சிலர் கூறுவர்.

இனி, மதுரையில் நிகழ்ந்த மற்ெருரு வரலாற்றினைக் காண்போம். சிவனது திருவடிகளையே தமது சிறந்த துணையெனக் கொண்டு மூர்த்தி நாயனுர் என்பவர் மதுரையம்பதியில் வாழ்ந்துவந்தார். நாளும் ஆலவாய்ப் பெருமானுக்குச் சந்தனக்காப்பு இடும் டணியினை இவர் தவருது செய்துவந்தார். அந்நாளில் வடுகக் கருநாடக மன்னன் ஒருவன் பாண்டிநாட்டை வென்று, மதுரையைத் தலைநகராக வைத்து ஆண்டுவந்தான். வடுக மன்னன் வேற்றுச் சமயத்தானுகையால், மூர்த்தி நாயனுர் செய்துவந்த திருத்தொண்டிற்குத் தடை ஏற்பட்டது. மன்னன் ஆணையால் நாயனுர்க்குச் சந்தனக்கட்டையும் கிடைக்கப் பெறவில்லை. இறைவர்க்குச் செய்யும் திருப்பணி நின்றுவிடுதல் கூடாதென்று கருதி, தமது முழங்கையினையே சந்தனக் கல்லில் வைத்துத் தேய்த்தார். இரத்தம் வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடியது. இது கண்டு மனம் பொருத இறைவனது திருவாக்கு அன்றிரவு வானெலியாக எழுந்தது.

"அன்பின் துணிவால்இது செய்திடல் ஐய! உன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண்
எல்லாங்கொண்டு
முன்புஇன்னல் புகுந்தன முற்றவும் நீத்துக்காத்துப்
பின்புஉன்பணி செய்துநம் பேருலகு எய்துக"

என்பதே இறைவன் திருவாக்காகும். இதுகேட்ட மூர்த்தியாரும் முழங்கையைக் கல்லில் தேய்த்தலை நிறுத்தினுர். அன்றிரவு வடுகக் கருநாடக மன்னனும் இறந்துபட்டான். அவன் மனைவியும், சுற்றத்தாரும் வருந்திப் புலம்பினர். பொழுது புலர்ந்தது. அமைச்சர் மன்னனுக்குரிய இறுதிக்

கடன்களைக் காலையிலேயே செய்து முடித்தனர். இறந்த மன்னனுக்கு மகப்பேறு இல்லை. தலைவனின்றி நாடு நலிவுறுமென்றெண்ணிய அமைச்சர் செய்வதறியாது திகைத்தனர். முடிவில், பட்டத்து யானையின் கண்களைக்கட்டித் தெருக்களில் விட்டு, அது எவரை எடுத்து வருகின்றதோ, அவரையே மன்னராக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கருதினர். ஆக்வே, யானையைப் பூசித்து, "தோளால் இம்மாநிலம் ஏந்த ஓர் ஏந்தலை ஏந்துக !" என்று கூறி அனுப்பினர்.

யானையும் மதுரையின் பல தெருக்களையும் சுற்றி, முடிவில் சோமசுந்தரப் பெருமான் வீற்றிருக்கும் கோயில் கோபுரத்தின் முன் சென்றது. மூர்த்தியாரும் இறைவன் திருவுளக் கருத்தை உன்னிக் கோயிலின் புறத்தே வந்தார். நாடு செய்த நல்வினையால் யானை அவர்முன் தாழ்ந்து, அவரை எடுத்துச் சுமந்தது. அதுகண்ட அமைச்சரும் மூர்த்தியார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தமது கருத்தைக் கூறினர். மூர்த்தியாரும் அரச பதவியேற்றுத் திருநீற்றினை அபிடேகப் பொருளாகவும், சிவனடியார்களின் அடையாளமாகிய உருத்திராகத்தினை அணிகலனுகவும், சடைமுடியைத் திருமுடியாகவும் கொண்டு இனிது அரசாண்டு வந்தார். இதன் காரணமாக இவர் "மும்மையால் உலகாண்ட மூர்த்தியார்" எனச் சிறப்பிக்கப் பெறுகின்றார்.

தமிழ் வளர்த்த பாண்டி மன்னர் தாமும் சிறந்த புலவர்களாக விளங்கினர். அவருள் இருவர் பாடிய பாடற் கருத்துக்களைக் காண்போம். ஆரியப்படை கடந்த

நெடுஞ்செழியான் என்பான் கல்வியின் சிறப்பினைக் குறித்துப் பாடிய பாடல் புறநானூற்றில் உள்ளது. "ஒரு தாய் தன் வயிற்றுப்பிறந்த பல குழந்தைகளுள் கல்வியால் சிறப்படைந்து விளங்குபவனையே பெரிதும் விரும்புவாள். ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் மூத்தவனை வருகவென அழையாது, நன்கு கற்றவன் செல்லும் நெறியிலேயே அரசனும் சென்று, அவன் சொற்கேட்டு நடப்பான். வேறுபாடு தெரியப்பட்ட நால்வேறு வகையான மக்களுள் கீழ் நிலையிலுள்ளான் நன்கு கல்வி கற்றிருப்பானுயின், மேல் நிலையிலுள்ளவனும் அவன் சொற்களுக்கு அடங்கி நடப்பான். ஆகவே, ஆசிரியர்க்குத் தேவையான காலத்து உதவியும், நிறைந்த பொருளைக் கொடுத்தும், சினங்கொள்ளாமலும் கற்றல் நல்லது."

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னுது அவருள்
அறிவுடை யோனுறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே."

நிலவில்லாத வானம் போன்றது குழந்தைச் செல்வமில்லாத வீடு. ஒருவன் பலரோடும் கூடியுண்ணும் செல்வத்தினை மிகுதியாகப் பெற்றிருப்பினும், அவனுக்கு

மக்கட் செல்வம் இல்லையேல் வாழ்நாள் வீணாளேயாகும். இத்தகைய குழந்தைச் செல்வம் தனது செயல்களால் பெற்றோர்க்கு இன்ப மயக்கம் அளித்தலைக் கீழ்வரும் பாடலில் பாண்டியன் அறிவுடை நம்பி நயம்பட விளக்கு கின்றான்.

"படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே." *புறம்: 188*

தமிழாலும், அங்கையற்கண்ணம்மையாலும் புகழ் பெற்று விளங்கும் மதுரை, இலக்கியங்களால் சிறப்பிக்கப்பெற்ற பெருமைமிக்க மதுரை, இன்று பல்கலைக் கழகம் ஒன்றையும் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது.

---

# 6. காவிரி

வாழ்த்துவதென்பது ஒரு தனிக்கலையாகும். தும்மு கின்ற குழந்தையை தாய் வாழ்த்தியருள்தலை நாம் நாளும் காண்கின்ருேம் தும்மும் தலைவனை வாழ்த்திய தலைவியைத் திருக்குறளில் காணலாம். உலகைப் படைத்துக் காக்கும் இறைவனுக்கும் "பாதகத்துப் பரிசி வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே" எனவும், "பைந்நாகணைப் பள்ளி கொண்டானுக்குப் பல்லாண்டு கூறுதுமே" எனவும் சைவரும், வைணவரும் பல் லாண்டு கூறி வாழ்த்துவர். வறியவரை வாழ்வித்த சிறு குடிப் பண்ணன் என்பானது கொடைத்திறத்தினை வியந்த சோழன் கிள்ளிவளவன் தனது வாழ்நாளையும் சேர்த்து அவன் வாழ்தல் வேண்டுமென்னும் பொருளில் "யான் வாழு நாளும் பண்ணன் வாழிய" என வாழ்த்து கின்ருன். "பஃறுளி ஆற்று மணலிலும் பல்லாண்டு வாழ்க" என்றும் "கொண்டல் மாமழை பொழிந்த நுண்பல் துளியினும் வாழிய பலவே" எனவும் புலவர் மன்னரை வாழ்த்தியருளுவர், சோழன் நளங்கிள்ளியின் இளவல் மாவளத்தானும், தாமப்பல் கண்ணனுர் என்னும் புலவரும் ஒருநாள் வட்டு ஆடினர். அப்பொழுது தவறி ழைத்த புலவர்மீது மாவளத்தான் வட்டினை வீசியெறிந் தான். இதனுல் சினங்கொண்ட புலவர் வெகுண்டு சில கூறினுர். அதுகேட்டு ஒன்றும் பேசாது நாணித் தலை குனிந்திருந்த மாவளத்தானை நோக்கி,

"யானே பிழைத்தனன் சிறக்க நின் ஆயுள்
மிக்குவரும் இன்னீர்க் காவிரி
எக்கரிட்ட மணலினும் பலவே" (புறம் - 43)

எனக் கூறி வாழ்த்தினர்.

சோழ நாட்டை வளமிக்க நாடாகச் செய்யும் காவிரியாற்றின் மணலும் வாழ்த்துதற்குப் பயன்படுகின்றது. காவிரியாற்றின் சிறப்பு தமிழிலக்கியங்கள் பலவற்றிலும் நன்கு பேசப்படுகின்றது.

கவேர முனிவர் என்பார் தாம் முத்தி பெறவேண்டிப் பிரம்மனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்து, அவரருளால் விஷ்ணுமாயையைத் தம் புதல்வியாகப் பெற்று முத்தியும் பெற்றார். பின்னர் பிரம்மனது கட்டளையால் மாயையாகிய கன்னி, நதி உருக்கொண்டு சென்றது. அந்நதியே கவேர கன்னி எனவும், காவேரி எனவும் அழைக்கப்பெறுகின்றது. ஆக்கினேய புராணம் காவிரியின் தோற்றம் குறித்து இவ்வாறு கூறுகிறது.

கந்தபுராணம் காவிரியின் தோற்றம் குறித்துக் கூறுதலைக் காண்போம். சூரபன்மனுக்கு அஞ்சிய இந்திரன் புகலி எனப்படும் சீகாழியில் மறைந்து வாழ்ந்து சிவபெருமானை வழிபட்டு வந்தான். அவன் தோற்றுவித்த நந்தவனம் நீரின்றி வாடியதால், சிவபூசைக்கும் தடை ஏற்பட்டது. இந்திரனது துன்பமுணர்ந்த நாரதர் அவனை நோக்கி, "அகத்தியர் கொங்கு நாட்டில் இருந்து சிவபூசை செய்து வருகின்றார். அவரது கமண்டலத்தில் காவிரியாறு உள்ளது. நீ விநாயகப் பெருமானை வழி

பட்டு வேண்டினல், அவர் அகத்தியரது கமண்டலத்தைக் கவிழ்த்துக் காவிரியை இங்கு வரச்செய்வார்'' என்றனர். நாரதரது கூற்றைக் கேட்ட இந்திரனும் விநாயகப் பெருமானை வழிபட, அவரும் இந்திரன் குறைதீர்க்கக் கருதிக் கொங்குநாடு சென்று காக்கை உருக்கொண்டு அகத்தியரது கமண்டலத்தைக் கவிழ்த்தார். காவிரியும் பெருக்கெடுத்தோடியது.

"என்னலும் காஞ்சி தன்னில் எம்பிரான் உலகம் ஈன்ற
அன்னைதன் அன்பு காட்ட அழைத்திட வந்த கம்பை
நன்னதி போல விண்ணும் ஞாலமும் நடுங்க ஆர்த்துப்
பொன்னியா றுலகந் தன்னில் பொள்ளெனப்
பெயர்ந்த தன்றே''

– கந்தபுராணம்

சிவப்பிரகாசர் பாடியருளிய பிரபுலிங்கலீலை என்னும் நூலின் காப்புச் செய்யுளாலும் இவ்வரலாறு விளக்கப்பெறுகின்றது.

'வையை என்னும் பொய்யாக் குலக்கொடி' பாண்டி நாட்டுக்கு வளம் நல்குவது போன்று, காவிரியாறும் சோழர் குலக்கொடியாக இருந்து வளம் தருதலை மணிமேகலை என்னும் காப்பியம் அழகுறக் கூறுகின்றது,

''பாடல்சால் சிறப்பின் பரதத்து ஓங்கிய
கோடாச் செங்கோல் சோழர்தம் குலக்கொடி
கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை''

– மணிமேகலை



கோள்கள் நிலைமாறிக் கோடை நீட்டித்தாலும், காவிரியாறு தான் என்றும் மாறுது நின்று நாட்டைப் பாதுகாக்கின்றது.

காவிரித்தாய் நடந்துவரும் அழகினைக் கண்டு இளங் கோவடிகள் பாடுதலைக் காண்போம்.

உழவர் ஓதை மதகு ஓதை
உடைநீர் ஓதை தண்பதங்கொள்
விழவர் ஓதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி !

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப் பூவாடையது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி !

பூவார்சோலை மயிலாலப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர்மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி !

சோழ நாட்டினைத் தனது மகவாகக் கொண்டு, அதனைப் பேணி வளர்க்கும் தாயாகக் காவிரி இருத்தலை,

" வாழிஅவன்தன் வளநாடு
மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழிஉய்க்கும் பேருதவி
ஒழியாய் வாழி காவேரி !"

எனப் பாடுகின்றார்.

'வெள்ளியென்னும் மீன் தான் நிற்றற்குரிய வட திசையினில் நில்லாது தென்திசைக்கண் செல்லினும், மழைத்துளியை உணவாகக் கொள்ளும் வானம்பாடி உணவின்றி வாடுமாறு மேகம் பொய்ப்பினும், தான் வளந்தருதலில் தவருத காவிரி' என்று காவிரியின் சிறப்பினைப் பட்டினப்பாலை பகர்கின்றது. 'காவிரியின் நீரால் என்றும் விளைவு குறையாத கழனிகளைக்கொண்ட சோழநாடு' எனச் சோணாட்டின் வளத்திற்குக் காவிரி துணையாயிருத்தலையும் பட்டினப்பாலை எடுத்துக் கூறுகின்றது.

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவிற்
புள்தேம்பப் புயல்மாறி
வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி" — பட்டினப்பாலை

காவிரியின் நீர்வளத்தால் ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளையுமென்பதனை,

"வேலி, ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே"

எனப் பொருநராற்றுப்படை கூறுகின்றது.

இத்தகைய வளமிக்க நாட்டினில் வாழும் மகளிர் தாம் அணிந்திருக்கும் அணிகலன்களையும் களையாது, செல்வக்களிப்பால் இரவும் பகலும் விளையாடி மகிழ்வரென்பதனை,

"மருதம் சான்ற மலர்தலை விளைவயல்
செய்யுள் நாரை ஓய்யும் மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை அயரும்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பில்
புகார்ச் செல்வ!"

எனப் பதிற்றுப்பத்து பகர்கின்றது.

**கம்பரும் காவிரியும்:**

கவிச்சக்கரவர்த்தி கம்பரது காலத்தில் ஒரு முறை காவிரியாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்துப் பல ஊர்களுக்கும் இன்னல் விளைவித்தது. இதனால் அச்சங்கொண்ட மக்களும், சோழ மன்னனும் யாது நேருமோவெனக் கலங்கினர். இதனையறிந்த கம்பர் காவிரிக் கரைக்குச் சென்று,

"கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனளென்று—இந்நீர்
உரைகிடக்க லாமோ உலகுடைய தாயே!
கரைகடக்க லாகாது காண்"

என்னும் வெண்பாவினைப் பாடினர். கம்பரின் கட்டளைக்குப் பணிந்ததுபோல் காவிரியின் வெள்ளமும் உடனே தணிந்தது. கம்பரின் புலமைச் சிறப்பினைக் கண்டு வியந்த சோழன் அவருக்குப் பல ஊர்களைப் பரிசிலாக அளித்துச் சிறப்பித்தான்.

கம்பரால் பாடப்பெற்றால் தனக்கு பெருமையுண்டாகுமென நினைந்த பெண்ணொருத்தி புலவரிடத்துத் தனது எண்ணத்தைக் கூறினள். கம்பரும் ஆயிரம்

பொன் கொடுத்தால் ஒரு பாடல் பாடுவதாகக் கூறினர். ஆனால், அப்பெண்ணிடத்தில் ஐந்நூறு பொன்மட்டுமே இருந்தது. அதனைக் கம்பரிடத்துக் கொடுக்கப் புலவர் பாடலின் ஒரு பகுதியை மட்டுமே பாடினரென ஒரு வரலாறு வழங்குகின்றது. பாடலின் எஞ்சிய பகுதியை அப்பெண்ணிடத்துக் கூழ்பெற்று ஔவையார் பாடி முடித்தாராம். கம்பர் பாடிய முற்பகுதி காவிரியைச் சிறப்பிக்கின்றது.

> " தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே
> மண்ணாவ தும்சோழ மண்டலமே "

என்பது கம்பர் பாடிய பகுதியாகும்.

**சுந்தரரும் காவிரியும் :**

நம்பியாரூரர், வன்றொண்டர் என்னும் பெயர்களைத் தாங்கியுள்ள சுந்தரர்க்கு மலைநாட்டு மன்னர் சேரமான் பெருமாள் நாயனர் நண்பராவர். ஆதியுலா எனப்படும் திருக்கைலாய ஞான உலாவினையும் வேறுசில நூல்களையும் சேரமான் பெருமாள் பாடியுள்ளார். சுந்தரரும், காவிரித் திருநதியின் தென்கரையிலுள்ள பல தலங்களையும் வழிபட்டுத் திருக்கண்டியூருக்கு வந்து இறைவனைப் பணிந்தனர். அப்பொழுது காவிரியின் வடகரையிலுள்ள திருவையாற்றைச் சேரர் கண்டார். அத்தலத்தைத் தரிசிக்க விழைந்த சேரமன்னர் தமது ஆர்வத்தைச் சுந்தரரிடத்துத் தெரிவித்தார். ஆனால் காவிரியாற்றில் ஓடமும் செல்ல முடியாதவாறு வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. சுந்தரர் ஐயாற்றுப் பெருமானை நினைந்து 'பரவும் பரிசு' எனத் தொடங்கும் பதிகம் ஒன்று

பாடியருளினர். பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் 'ஐயாறுடைய அடிகளோ' என முடிகின்றது. இப் பதிகம் கேட்ட சிவபெருமான் தடைப்பட்டு எதிர் நிற்கும் கன்றின் குரல் கேட்டுக் கனைக்கும் தாய்ப்பசு போன்று, சராசரங்கள் எல்லாம் கேட்குமாறு 'ஓலம்' என்று கூறியருளினர். உடனே காவிரியும் இடையே பிரிந்து வழிகாட்டியது. இந்நிகழ்ச்சியினை,

"மன்றில் நிறைந்து நடமாட
வல்லார் தொல்லை ஐயாற்றில்
கன்று தடையுண்டு எதிரழைக்கக்
கதறிக் கனைக்கும் புனிற்றுப்போல்
ஒன்றும் உணர்வால் சராசரங்கள்
எல்லாங் கேட்க ஓலமென
நின்று மொழிந்தார் பொன்னிமா
நதியும் நீங்கி நெறிகாட்ட"

என்னும் சேக்கிழார் பாடல் விளக்குகின்றது.

இறைவன் திருவருளை வியந்த சுந்தரரும், சேரரும் காவிரி காட்டிய வழியே சென்று ஐயாற்றுப் பெருமானைத் தரிசித்து மீண்டும் அவ்வழியே வந்து காவிரியின் தென்கரையை அடைந்தனர். அவர்கள் கரையினை அடைந்தவுடன் மலைபோல் நின்ற நீர் முன்போலப் பெருகி ஓடிற்று.

**சோழனும் காவிரியும் :**

சோழ மன்னன் ஒருவன் ஒருநாள் காவிரிக்குச் சென்று நீராடுங்கால், அவன் அணிந்திருந்த விலையுயர்ந்த மாலையொன்று நீரில் விழுந்துவிட்டது.

அதுகண்ட சோழன் இறைவனை நினைந்து பணிந்து, ''நின்மலா! நீயே ஆரங் கொள்ளுக!'' என வேண்டினன். மறுநாள் இறைவனுக்குக் காவிரி நீர் கொண்டு அபிடேசம் செய்யுங்காலை குடத்தினின்று ஆரம் இறைவனது திரு முடியில் விழுந்தது. இச்செயல் நடைபெற்றது காவிரிக் கரையிலுள்ள திருவானைக்கா என்னும் திருத்தலத்தி லாகும். இத்தலத்துப் பெருமானது திருநாமங்களுள் 'ஆரங்கொண்ட பெருமான்' என்பதும் ஒன்றாகும் சுந்தரர் பாடிய தேவாரப் பாடல்களுள் ஒன்று இச் செய்தியினைக் கூறுகின்றது.

தார மாகிய பொன்னித்
தண்டுறை ஆடி விழுத்தும்
நீரில் நின்றடி போற்றி
நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங் கொண்டஎம் ஆனைக்
காவுடை ஆதியை நாளும்
ஈரம் உள்ளவர் நாளும்
எம்மையும் ஆளுடை யாரே. – *சுந்தரர்*

சிவக்கொழுந்து தேசிகர் என்பார் 'தஞ்சைப் பெரு வுடையார் உலா' என்னும் பிரபந்தம் பாடியுள்ளார். இந்நூலில் தஞ்சைப் பெருவுடையார்க்குரிய தசாங்கங் களைக் கூறும் புலவர், பெருவுடையார்க்குரிய நதியாகக் காவிரியைக் குறிக்கின்றார்.

"வானவர்சூழ் வெள்ளி மலையான்தன் பாற்படிந்தோர்
மானவினை மாற்றுபொன்னி மாநதியான் - மாநிலத்தில்
ஈட்டுபுகழ்த் தேசம் எவற்றினுக்கு மேலதென
நாட்டுகின்ற சோழவள நாட்டினன்".

தன்பால் நீராடுவோரின் பழம்பெருந் தீவினைகளை மாற்றும் தன்மையது காவிரி என்பதனை, 'மானவினை மாற்றும் பொன்னிமாநதி' எனக் கூறுகின்றார் இப் புலவர் தாம் பாடிய மற்றொரு நூலில் காலமறிந்து உயிர் களுக்குக் காவிரி உதவி செய்தலை,

"ஞாலந் தன்னில் நண்ணிடும் உயிர்க்கெலாம்
கால மோர்ந் துதவும் காவிரி"

என்கின்றார்.

## ஆதிமந்தியாரும் காவிரியும் :

சோழ மன்னருள் தலைசிறந்து விளங்கிய கரிகால் பெருவளத்தானுக்கு ஆதிமந்தியார் என்னும் பெயர் கொண்ட ஒரு மகள் இருந்தாள். இவளது கணவன் ஆட்டனத்தி என்பான் சேரர் குடியைச் சேர்ந்தவனாவான். இவன் ஆடற்கலையில் சிறந்து விளங்கினான். காவிரி யாற்றில் ஆண்டுதோறும் புதுப்புனல் விழா நடைபெறும். இவ்விழாவினைக் கண்டு களித்தற்குக் கரிகாற்சோழன் தனது சுற்றம் புடைசூழக் கழார் என்னும் ஊரின்கண் ணுள்ள காவிரித் துறைக்குச் சென்றான். இப்புனல் விழா சிலப்பதிகாரத்திலும் பேசப்படுகின்றது. புகார் நகரில் நடைபெற்ற இந்திர விழாவில் மக்களனைவரும் கடலாடச் சென்றனர். அப்பொழுது கடற்கரையில் எழுந்த ஆர வாரம், காவிரியில் புதுப்புனல் விழா கொண்டாடும் பொழுது எழுந்த பேரொலியை ஒத்திருந்ததாம்.

புதுப்புனல் விழாவிற்குக் கரிகாலனுடன் சென்ற ஆட்டனத்தி தானும் விழாவில் கலந்துகொள்ள விரும்பி, ஆற்றில் இறங்கிப் பலவகையான நடனங்கள் ஆடினன்.

இவனது ஆடலைக் கண்டு பலரும் மகிழ்ந்தனர் காவிரி நதி ஆட்டனத்தியின் அழகில் மயங்கி அவனைத் தன்னுள் மறைத்துக்கொண்டது. இச்செய்தியினைப் பரணர் வாக்கில் காணலாம்.

> "ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
> கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
> தண்பதம் கொண்டு தவிர்ந்த இன்னிசை
> ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
> சுருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று
> இரும்பொலப் பாண்டில் மணியொடு தெளிப்பப்
> புனல்நயந்து ஆடும் அத்தி அணிநயந்து
> காவிரி கொண்டு ஒளித் தாங்கு" -(அகம்)

தனது கணவனைக் காணாது பெருந்துன்பங்கொண்ட ஆதிமந்தியார் பலவிடங்களிலும் தேடி இறுதியாகக் கடற்கரையில் நின்று கலங்கினாள். அவளது துயர் கண்ட மருதி என்னும் நல்லாள் கடலில் அஞ்சாது புக்கு, ஆட்டனத்தியைத் தேடித்தந்து அழியாப் புகழ்பெற்றாள்.

காவிரிக்கரையில் பல திருத்தலங்கள் உள்ளன. இத்தலங்களைக் காவிரியின் தென்பால் உள்ளவை, வடபால் உள்ளவை எனவும் பிரித்துக் கூறுவர். திருவரங்கம் காவிரிக்கரையிலுள்ள சிறந்த வைணவத் தலமாகும். இத்தலத்தில் திருமால் கிடந்த திருக்கோலத்துடனிருத்தலை,

> " ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
> பாயற் பள்ளி பலர்தொழு தேத்த
> விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
> திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்"

எனச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

"கங்கையிற் புனித மாய
காவிரி நடுவு நாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும்
பூம்பொழில் அரங்கந் தன்னுள்
எங்கள்மால் இறைவன் ஈசன்
கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்வேன்
ஏழையேன் ஏழையேனே"

என்று அரங்கப்பெருமானை மறக்க இயலாத நிலையினைப் பேசும் அடியார் 'கங்கையிற் புனிதமாய காவிரி' எனக் காவிரியைச் சிறப்பித்தலையும் காணலாம்.

ஆழ்வார்களுள் பதின்மரும், ஆண்டாளும் பாடியிருக்கும் சிறப்பு அரங்கநாதனுக்கேயுரியதாகும் பொன்னியாறு தனது அலைகளென்னும் கரங்களால் பாதங்களை வருட, அரவரசப் பெருஞ்சோதி அனந்தாழ்வானைப் பாயலாகக் கொண்டு அறிதுயில் கொள்ளும் பெருமானைக் குலசேகரர் பாடிப் பரவுதலைக் காண்போம்.

இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணிபணம் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னித்
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டுஎன்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே!

கயிலைக்காட்சியைக் காண விழைந்து சென்ற திருநாவுக்கரசருக்குச் சிவபெருமான், தாம் கயிலையில் வீற்றிருக்கும் காட்சியினை ஐயாற்றில் காட்டியருளினர். காவிரிக் கரையிலுள்ள திருவையாறு சிறந்த திருத்தலமாகும். இன்னிசை மும்மணிகளுள் ஒருவராகிய தியாகராஜர் நினைவாக இத்தலத்தில் ஆண்டுதோறும் இசை விழா நடத்தலை அனைவரும் அறிவர். இத்தலத்துப் பெருமானது சிறப்பினைத் திருஞானசம்மந்தரது திருவாக்கில் காணலாம்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவையாறே.

இலக்கியங்களால் பலவாறு சிறப்பிக்கப்படும் காவிரி கடலினையும் புனிதமாக்குந் தன்மையதாம். இதனை, "பொன்னி நன்னதி மிக்கநீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக்கும்" எனத் திருத்தொண்டர் புராணம் கூறுகின்றது.

---

# 7. இலக்கியக் கனிகள்

தாம் பெற்ற இன்பம் உலகமும் பெற்று மகிழ்தல் வேண்டுமென்னும் உயரிய எண்ணத்தால் திருநாவுக்கரசர் மக்கட்கு ஒரு கனி கொடுத்து அருள்கின்றார். அக்கனி உண்பார்க்குப் பேரின்பம் அளிக்கவல்லது. சாலவும் இனியது கனியின் பெயர் தெரியவேண்டுமா? அது ஈசன் எனும் கனியாகும். கனி கொடுத்தால் அதனை வேண்டாவென்று ஒதுக்குவோர் யார்? எவருமிலர். திருநாவுக்கரசர் திருவாக்கைப் பாருங்கள்.

"மனிதர் காள்இங்கே வம்ஒன்று சொல்லுகேன்!
கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரே!
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே."

நமச்சிவாயக் கனி உண்ண உண்ணத் தெவிட்டாது தித்தித்திருக்கும் இயல்பினை,

"ஒன்று கண்டீர் உலகுக்கொரு தெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது
நன்று கண்டீர்இனி நமச்சிவா யப்பழம்
தின்று கண்டேற்குஇது தித்தித்த வாறே"

எனத் திருமூலர் பாடுகின்றார்.

நம்மாழ்வாரும் இறைவனை இனிமை நிறைந்த கனியாகக் கண்டு மகிழ்கின்றார்.

"எக்காலத்து எந்தையாய் என்னுள் மன்னில்மற்று
எக்கா லத்திலும் யாதொன்றும் வேண்டேன்
மிக்கார் வேத விமலர் விழுங்குமென்
அக்காரக் கனியே உன்னை யானே."

'தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தொன்றாக் கூட்டி, அதனுடன் நறுநெய்யும் சர்க்கரையும், பருப்புத்தூளும் கலந்து, இளஞ்சூட்டில் வைத்து, எடுத்த கட்டியினும் இனியன் இறைவன்' என்று இராமலிங்க அடிகள் கூறுவதும் படித்து மகிழ்தற்குரியது.

## ஔவையும் அதியமானும்

கடையெழு வள்ளல்களுள் ஒருவனான அதியமான் நெடுமான் அஞ்சி தகடூரைத் தலைநகராக வைத்து ஆண்டு வந்தான். இன்றைய தருமபுரியே முற்காலத்தில் தகடூர் எனப்பட்டது. அதியமானுடைய வீரமும், ஈரமும் புறநானூற்றிலும், பிற இலக்கியங்களிலும் பலவாறு புகழ்ந்து பேசப்படுகின்றன. சீறிவரும் புலியினை எதிர்த்து நிற்கும் மான் கூட்டமும், கதிரவன் முன் நிற்கும் இருளும், ஆற்றல் மிக்க பகட்டுக்குக் கடக்கமுடியாத வழிகளும் உலகில் காண முடியாவாம். அதுபோன்று அதியமானை எதிர்த்து நிற்கும் பகைவரும் இலர். ஒருநாளில் எட்டுத் தேர்களைச் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்ற தச்சன் ஒரு மாதம் அரிதின் முயன்று செய்த தேர்க்காலைப் போன்று வலிமைபடைத்த அதியமான் பகைவர்க்குக் கூற்றுவனாக இருந்தான்.

'இல்லோர் ஒக்கல் தலைவன்' எனச் சிறப்பிக்கப் படும் அதியமானிடத்துப் பலநாட்கள் பலரொடு கூடிச் சென்றாலும் முதல் நாள் மகிழ்ச்சியுடன் வரவேற்றது போன்று மகிழ்ந்து எதிர்கொள்வான். உலகம் வறுமை யுற்றகாலையும் அவன் புரத்தல் வல்லன்.

அதியமானுக்குரிய மலையொன்றின் பாறைப்பிளவில் நெல்லி மரம் ஒன்றிருந்தது. அம்மரம் பல ஆண்டுகட்கு ஒருமுறை மட்டுமே கனி கொடுக்கும். அக்கனியினைப் பறித்தலும் எளிய செயலன்று. உண்டாரை நெடுங் காலம் வாழ்விக்கும் அக்கனியினைப் பெற்ற அதியமான் தானுண்ணாது, தமிழ் மூதாட்டி ஔவைக்குக் கொடுத்து மகிழ்ந்தான். கனியின் அருமை பெருமைகளை உணர்ந்த ஔவையார், அதியமானது கொடைத்திறத்தினை வியந்து பாடுகின்றார்.

"பழமையான மலையின்கண் தோன்றிய நெல்லிக் கனியின் பெருமையினை எனக்குக் கூறாது, என் சாதல் நீங்க எனக்கு அதனை அளித்துதவிய பெருமானே! சாதற்குக் காரணமான நஞ்சினை உண்டும் நிலைத்து வாழ்பவனும், நீலமணி போன்ற கழுத்தினைக் கொண்ட வனுமாகிய சிவபெருமான் போன்று நீ என்றும் வாழ் வாயாக!"

"நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே! தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே!"

என்பது ஔவையார் அதியமானை வியந்து பாடிய பாடற் பகுதியாகும்.

**காயசண்டிகையும் நாவற்கனியும்:**

காஞ்சனபுரத்து விஞ்சையர்மகள் காயசண்டிகை என்பாள் தனது கணவன் காஞ்சனனுடன் பொதியில் வளம் காணுதற்குத் தென்னாடு நோக்கி வந்தனள். அவர்கள் வரும் வழியில் ஒரு காட்டாற்றின் கரையினில் நாவற்கனி ஒன்று தேக்கிலையில் வைக்கப்பட்டிருந்தது, அக்கனி விருச்சிகன் என்னும் முனிவனுக்குரியது. அது பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பழுக்கும் தன்மையது; தெய்வத் தன்மை பொருந்தியது. அதனை உண்போர் பன்னீராண்டு பசித்துன்பம் நீங்கியிருப்பர். விருச்சிக முனிவன் அக்கனியினை உண்டு பன்னீராண்டுகள் உண்ணா நோன்பிருக்கும் இயல்பினன். செருக்குடன் நடந்து வந்த காயசண்டிகையின் காலில் மிதிபட்டு அக்கனி சிதைந்து போயிற்று.

தேக்கிலையில் கனியினை வைத்து நீராடச் சென்ற விருச்சிகன், நீராடி முடித்துக் கனியினை உண்ணுதற்கு வந்தான். ஆனால், காயசண்டிகையால் கனி சிதைக்கப்பட்டிருத்தலைக் கண்டு கடுஞ்சினங் கொண்டு, '' நீ வான் வழியே செல்லும் மந்திரத்தினை மறந்து, யானைத்தீ என்னும் நோயால் வருந்துக '' என அவளுக்குச் சாபமளித்தான். மணிமேகலையிடத்து அமுதசுரபியினின்று உணவினைப் பெற்று உண்ட பின்பே அவளது நோய் நீங்கலாயிற்று.

> "சீர்திகழ் நாவலில் திப்பிய மானது
> ஈராறு ஆண்டில் ஒருகனி தருவது

அக்கனி உண்டோர் ஆறீ ராண்டு
மக்கள் யாக்கையின் வரும்பசி நீங்குவர்
பன்னீ ராண்டில் ஒருநா ளல்லது
உண்ணு நோன்பினேன் உண்கனி சிதைத்தாய்
அந்தரம் செல்லும் மந்திரம் இழந்து
தந்தித் தீயால் தனித்துய ருழந்து
முந்நா லாண்டில் முதிர்கனி நான்ஈங்கு
உண்ணும் நாள்உன் உறுபசி களைக" -மணிமேகலை

## திருக்குறளும் தீங்கனியும் :

உலகத்தவரால் விரும்பப்படும் சான்றோனிடத்துள்ள செல்வம் எல்லோர்க்கும் நன்கு பயன்தருதலைத் திருவள்ளுவர் அழகுற விளக்குகின்றார். ஊருணியினையும், மருந்து மரத்தினையும், ஊர்நடுவே பழுத்திருக்கும் பயன்தரும் பழுமரத்தினையும் சான்றோன்பால் உள்ள செல்வத்திற்கு உவமைகளாகக் கூறுகின்றார். பழம் தரும் மரம் எனக் கூருது, பயன் தரும் பழுமரம் எனக் கூறுகின்றார். ஆம்! சில மரங்கள் கனிகளைப் பெற்றும் அவை பயன்தராதிருத்தலைத் திருவள்ளுவர் காண்கின்றார். அவையும் கனி தரும் மரங்களேயாகும். ஆனல் அவை உண்டார்க்கு ஊறு விளைவிக்கும் நச்சுக்கனிகளாகும்.

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

ஊர் நடுவே நச்சுமரம் பழுத்து யாது பயன்? உலகத்தவரால் விரும்பப்படாதவனுடைய செல்வமும், நச்சு மரத்தில் பழுத்த பழத்தினைப் போன்றதாம்.

பிறர்க்குப் பொருள் கொடுத்துத்தான் உதவவேண்டுமென்பதில்லை. பொருளற்றவனும் பிறர்க்குத் துணையாக

நின்றுதவலாம். "நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்! நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்! அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்" என்று எல்லோரும் பிறர்க்குத வும் வழியினை எளிதாகக் கூறிச் செல்கின்றான் பாட்டுக் கொரு புலவன் பாரதி. பிறரிடத்து இனிய சொற்களைப் பேசி மகிழ்தல் எல்லோராலும் இயலும். 'யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை' என்பது திருமூலர் வாக்காகும். இனிய சொற்கள் பல இருக்க அவற்றை நீக்கி வன்சொற் களைப் பேசிப் பிறரால் ஒதுக்கப்பட்டு நிற்கும் சிலரைக் காண்கின்றார் திருவள்ளுவர். பழுத்த மரத்தினடியில் பசியோடு நிற்கும் இவர்கள் தீங்கனியைப் பறித்து உண்ணாது. சுவையற்ற காய்களைப் பறித்தலைக் கண்டு வருந்துகின்றார்.

> **இனிய உளவாக இன்னாத கூறல்**
> **கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.**

'கனியிருப்பக் காய் கவர்தல்' என்னும் உவமை திருநாவுக்கரசராலும் எடுத்தாளப்படுகின்றது இறைவ னுடைய திருவருளை நினையாது வறிதே காலம் கழிப்ப தாகத் தம்மையே நொந்து கொள்ளும் இவர் 'கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே' எனவும், 'விளக்கிருக்க மின்மினித் தீக் காய்ந்தவாறே' எனவும், 'கனி இருப்பக் காய் கவர்ந்த கள்வனேனே' எனவும் கூறிக்கொள் கின்றார்.

**புனிதவதியாரும் மாங்கனியும்:**

சோணாட்டில் கடல் வளத்தால் சிறப்புற்றுத் திகழும் காரைக்காலின்கண் வணிகர் குடியில் புனிதவதியார் தோன்றினார். இவரது தந்தை தனதத்தன் என்பான்

வணிகர் குலத் தலைவனாக விளங்கினான். புனிதவதியார் இளமையிலிருந்தே சிவபிரானிடத்துப் பேரன்பு பூண்டு வாழ்ந்து வந்தார். அடியார்களிடத்துப் பெருமதிப்பு வைத்து அவர்களையும் வழிபட்டு வந்தார் இல்லிகவாப் பருவமும் இவருக்கு வந்துற்றது. நாகையில் வாழ்ந்து வந்த நிதிபதி என்னும் பெரும் புகழ்கொண்ட வணிகன் மகனான பரமதத்தனுக்கும், புனிதவதியார்க்கும் ஒரு நன்னாளில் திருமணம் நடைபெற்றது. சிவனது திருவடிகளை என்றும் உள்ளத்திருத்தி வழிபட்டுவந்த புனிதவதியார் இல்லறத்திலும் சிறந்து விளங்கினார் அடியார் எவரேனும் வரின் அவர்க்கு இன்னடிசில் படைத்தும், பொன்னும் துகிலும் கொடுத்து மகிழ்ந்துவந்தார்.

ஒருநாள் பரமதத்தனிடத்து வாணிகத்தின் பொருட்டு வந்த சிலர் இரண்டு மாங்கனிகளைக் கொடுத்துச் சென்றனர். பரமதத்தனும் அவற்றை இல்லத்திற்கு அனுப்பி வைத்தான். அப்பொழுது பசியால் வாட்டமுற்ற அடியார் ஒருவர் மனைக்கு வந்தார். அவரது பசியை உடனே போக்குதற் பொருட்டுப் புனிதவதியாரும் உணவு படைக்கலானார். கறியமுது அப்பொழுது சமைக்கப் பெறவில்லை. தமது கணவன் கொடுத்தனுப்பிய மாங்கனிகளில் ஒன்றனை அடியார்க்கு உணவுடன் படைத்தார்.

அன்று நண்பகல் பரமதத்தன் உணவிற்காக இல்லத்திற்கு வந்தான் அவனுக்கு உணவு படைத்த புனிதவதியார் உண்கலத்தில் சோறு, கறி வகைளுடன் எஞ்சிய ஒரு மாங்கனியினையும் இட்டார். அக்கனி சுவை மிக்கிருத்தலைக் கண்ட பரமதத்தன் மற்றொரு கனியினையும்

கொண்டுவருமாறு ஏவினன். புனிதவதியார் கனிக்கு என்செய்வார்? மற்றொன்றினை அடியார்க்கு இட்டதைக் கூருது, அதனைக் கொண்டுவருவார்போன்று உள்ளே சென்ருர். மனந்தடுமாறிச் சிவனது திருவடிகளை நினைந்தார். உடனே இறைவனது திருவருளால் புனிதவதியார் கையினில் அதிமதுரக்கனி ஒன்று வந்து சேர்ந்தது. உவகையுடன் அதனைக் கொணர்ந்து தம் கணவனுக்கு இட்டார். அக்கனியினை உண்டு சுவைத்த பரமதத்தன் அது முன்னையதைக் காட்டிலும் சுவைமிக்கிருத்தலை உணர்ந்து, "இக்கனி நான் முன்னம் அனுப்பியதன்று; இது மூவுலகினும் கிடைத்தற்கரியது இதனை நீ எங்ஙனம் பெற்ருய்?" என வினவினன். இறைவனது திருவருட் செயலை எடுத்துரைத்தற்கு முதற்கண் அஞ்சிய புனிதவதியார் பின்னர் நிகழ்ந்த செயலைக் கூறினர். அது கேட்ட பரமதத்தன் "இறைவனருளே கனி தந்ததெனில், அவனருளால் மற்றுமொரு கனி பெற்றுத் தருக" என்றனன். கணவனது சொற்களைக் கேட்ட புனிதவதியார் அப்பால் சென்று இறைவனை நினைந்து, "மற்றுமொரு கனி அளித்தருளவில்லையெனில் என்னுரை பொய்யாம்" என்று இறைஞ்சினர். அவ்வளவில் மற்ருெரு கனியும் அவர் கையினை வந்தடைந்தது. அதனைக் கொணர்ந்து தமது கணவனிடத்துக் கொடுக்க, அவனும் அதனை வியந்து வாங்கினன். ஆனல் மாங்கனியோ அவன் கையினின்று மறைந்தது. அதுகண்ட பரமதத்தன் அச்சங்கொண்டு, தனது மனைவியினைத் தெய்வமெனவே கருதித் தனித்து வாழ்தற்கு விரும்பினன். ஒருநாள் வணிகத்தின் பொருட்டு அயல்நாடு சென்றவன் பல ஆண்டுகள் ஆகியும் திரும்பவில்லை. வாணிகத்தில்

பெரும்பொருளீட்டிப் பாண்டி நாட்டின் பட்டினமொன் றினைச் சேர்ந்து வாழ்ந்துவந்த பரமதத்தன் மற்றொரு திருமணமும் செய்துகொண்டான். தனக்குப் பிறந்த பெண்மகவுக்குத் தனது முதல் மனைவியின் பெயரான 'புனிதவதியார்' என்பதனையே இட்டு அழைத்துவர லானான்.

பரமதத்தன் பாண்டி நாட்டில் வாழ்ந்துவருதலைத் தெரிந்துகொண்ட புனிதவதியாரது சுற்றத்தார் அவரைக் கணவனிடத்துச் சேர்த்தலே நலமெனக் கருதி, புனித வதியாருடன் பாண்டிநாட்டின் கண்ணுள்ள பட்டினத்தை வந்தடைந்தனர். அவர்களது வருகையை உணர்ந்த பரமதத்தன் தனது மனைவியுடனும், மகளுடனும் எதிர் சென்று புனிதவதியார் பாதங்களில் வீழ்ந்து, "யான் உமதருளால் வாழ்வேன்; இவ்விளங்குழவி தானும் பான்மையால் உமது நாமம்" என்றனன். புனிதவதி யாரோ அஞ்சி ஒதுங்கினர். அது கண்ட சுற்றத்தார் மனைவியை வணங்குதற்குக் காரணம் யாதென வினவப் பரமதத்தனும்,

> "மற்றவர் தம்மை நோக்கி மானுடர் இவர்தாம் அல்லர்
> நற்பெருந் தெய்வமாதல் நானறிந்து அகன்ற பின்பு
> பெற்றஇம் மகவு தன்னைப் பேரிட்டேன் ஆதலாலே
> பொற்பதம் பணிந்தேன்; நீரும் போற்றுதல் செய்மின்"

என்றான்.

அதுகேட்ட புனிதவதியாரும் இறைவனைப் பணிந்து அன்றுவரை கணவற்காகத் தாங்கிவந்த தசைப்பொதி யினை நீத்துப் பேய் வடிவினை வேண்டிப் பெற்றார்.

அற்புதத் திருவந்தாதி, திருஇரட்டை மணிமாலை முதலான நூல்களைப் பாடியருளிய இவர் இறைவனால் "அம்மையே" என்றழைக்கும் பெருமையினையும் பெற்றார். 'காரைக்காலம்மையார்' எனக் கூறப்பெறும் புனிதவதியார் அறுபான்மும்மை நாயனருள் ஒருவராய்த் திகழ்ந்து வருகின்றார்.

## பாண்டவரும் நெல்லிக்கனியும்

பாஞ்சாலி ஒருநாள் விசயனுடன் கானகத்தின் வளத்தினைச் சுற்றிப் பார்த்துவந்தாள். கானகத்தின் ஒரு பகுதியில் நெல்லி மரம் ஒன்றிருந்தது. அம்மரத்தில் ஒரு கனி மட்டுமே இருந்தது அக்கனியினை விரும்பிய பாஞ்சாலி தனது அவாவினை விசயனிடத்துக் கூற, அவனும் அதனை அம்பொன்றால் வீழ்த்தினன். காட்டிலிருந்த முனிவர் பலரும் அச்செயலைக் கண்டு, "இக்கனி அமித்திரர் என்னும் முனிவருக்குரியது. அவர் இக்கனியினை உண்டு நெடுங்காலம் உணவின்றித் தவம் செய்வார். அவருக்குச் சினம் தோன்றாது; தோன்றினல் எவராலும் தடுக்கவும் இயலாது" என அருச்சுனனிடத்துக் கூறினர். அதுகேட்ட அருச்சுனன் தருமரிடத்துச் சென்று நிகழ்ந்தவற்றைக் கூறினன். நாடிழந்து காட்டில் வாழும் தங்கட்கு மேன்மேலும் துன்பம் வருதலைக் கண்ட தருமர் மனம் வருந்திக் கண்ணனை நினைந்தார். கண்ணனும் பாண்டவர்முன் தோன்ற அனைவரும் அவனைப் போற்றித் தங்கட்கு நேர்ந்த இன்னலைக் கூறினர்.

கண்ணன் அவர்களை நோக்கி, உங்கள் உள்ளத்தில் உள்ள எண்ணங்களை ஒளியாது கூறினல், கனி முன்

பிருந்த இடத்தில் தானே போய்ப் பொருந்தும்'' எனக் கூறினன். ஒவ்வொருவரும் தங்கள் உள்ளக் கருத்தைக் கூறக் கனியும் மரத்தில் சென்று பொருந்தியது.

**சிவப்பிரகாசரும் மாங்கனியும் :**

நால்வர் நான்மணி மாலை, பிரபுலிங்க லீலை முதலான சுவைநலங் கனிந்த நூல்களைப் பாடியருளிய சிவப்பிர காசர் ஒருநாள் ஆற்றிலே நீராடித் திரும்பும் வழியில், மாஞ்சோலையொன்றின் புறத்தே ஒரு மாங்கனி விழுந்து கிடத்தலைக் கண்டார். அதனைச் சிவபெருமானுக்குப் படைத்தற் பொருட்டு மடியில் எடுத்து வைத்துக்கொண் டார். அஃதறிந்த அச்சோலைக் காவலன் வெகுண்டு புலவரைப் பலவாறு துன்புறுத்தினன். இதனல் புலவ ரும் சினங்கொண்டு ஒரு பாடலைப் பாட அக்காவலனும் இறந்தொழிந்தான். அவர் பாடிய பாடல் வருமாறு :

அடுத்துவரும் தொண்டனுக்கா அந்தகனைத் தாளால்
அடர்த்ததுவும் சத்தியமே ஆனல்—எடுத்ததொரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கு ஆதித்தன்வரத் தான்.

**சுட்ட பழமும் சுடாத பழமும் :**

தமிழ் மூதாட்டி ஔவையார் ஒருமுறை சோலை யொன்றின் வழியே வந்துகொண்டிருந்தார். அப்பொழுது நாவல் மரத்தின் மீதிருந்த சிறுவன் ஔவையாரை நோக்கி, ''அம்மையே! சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?'' என வினவினன். புலமையிற் சிறந்த ஔவை இவ்வினவினைக் கேட்டுச் சிறிது தயங் கினர். நன்கு கனிந்து இனிக்கும் பழத்தினை அறிவாரே

யன்றிச் சுட்ட பழமும், சுடாத பழமும் புலவர் கண்டிலர். அதனால் சிறுவனை நோக்கி ஔவையார், "சிறுவனே! எனக்குச் சுட்ட பழம் வேண்டும்" என்றனர். சிறுவனும் நன்கு கனிந்த கனிகள் சிலவற்றைப் பறித்துக் கீழே எறிந்தான். அவற்றை உண்ண விழைந்த ஔவையார் பழங்களில் மணல் ஒட்டியிருத்தலைக் கண்டு, வாயினால் மெல்ல ஊதி மணலைப் போக்கலானார். அதுகண்ட சிறுவன் "புலவரே! பழம் சுடுகின்றதா?" எனக் கேட்டனன். அப்பொழுது சுட்ட பழம், சுடாத பழம் ஆகியவற்றின் பொருள் ஔவைக்குப் புலனாயிற்று.

"கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்"

என்னும் உண்மையுணர்ந்த புலவர் நாணித் தலை குனிந்தார். ஆறுமுகப்பெருமானே சிறுவனாக வந்து ஔவையிடத்துத் திருவிளையாடல் புரிந்ததாகக் கூறுவர்.

"ஒட்டிய மண்நீங்கக் — கனியெடுத்து
ஊதி நிற்கையிலே
சுட்ட கனியிதுஎனச் — சிறுவன்
சொல்லி மறைந்திட்டான்.
மாடு மேய்ப்பவனும் — என்னை
மடக்கி விட்டானென்று
நாடு புகழும் ஔவை — அன்று
நாணித் தலைகுனிந்தாள்.
கந்தன் முருகனே — ஔவையின்
கருவம் போக்குதற்கிவ்
விந்தை செய்தான் — என்று
புலவர் விளம்புகின்றாரம்மா!"

இவ்வாறு கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை யவர்கள் மேற்கூறப் பெற்ற நிகழ்ச்சியினைப் பாடுகின்றார்.

**கன்றும் உதவும் கனி:**

'சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய பறம்பிற் கோமான் பாரி', 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' எனப் பலவாறு இலக்கியங்களில் சிறப்பிக்கப்பெறும் வள்ளல் பாரி முந்நூறு ஊர்களையும் பரிசிலாகக் கொடுத்து உயர்ந்தவன். இவனது மறைவுக்குப் பின், இவனது புதல்வியர் அங்கவை, சங்கவை என்னுமிருவரும் பெரிதும் துன்புற்றனர்.

ஒருநாள் மழையில் நனைந்து வருந்திய ஔவையார் ஓர் இல்லத்தை அடைந்தனர். நனைந்த ஆடை காரணமாக அவரது உடல் குளிரால் நடுங்கிற்று. அவர் அடைந்த இல்லத்தே பாரிமகளிர் தங்கியிருந்தனர். ஔவையின் நடுக்கங்கண்ட அவர்கள் தம்மிடமிருந்த நீலச் சிற்றாடையினைக் கொடுத்துதவினர். இதனால் மனம் மகிழ்ந்த ஔவையார்,

> "பாரி பறித்த கலனும் பழையனூர்க்
> காரி கொடுத்த களைக்கட்டும் — சேரமான்
> வாராயோ என்றழைத்த வாய்மையும் இம்மூன்றும்
> நீலச் சிற்றாடைக்கு நேர்"

என்னும் வெண்பாவினைப் பாடினர்.

வாழையின் கீழிருந்த கன்றும் கனி கொடுத்து உதவுதல் போன்று, பாரி மகளிர் வறுமையுற்ற

காலையும் தமது ஆடையினைக் கொடுத்து உபசரித்தது நினைந்து மகிழ்தற்குரியது. சிவப்பிரகாசரது பாடலொன்று பாரி மகளிரது கொடைக்கு விளக்கமாக உள்ளது. அப்பாடலைக் காண்போம்.

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கு ஈந்தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ — பைந்தொடீ!
நின்று பயனுதவி நில்லாஅரம் பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி. — *நன்னெறி.*

**ஔவையாரும் பனம்பழமும் :**

பாரிமகளிர் திருமணத்திற்கு ஔவையாரின் வேண்டுகோட்படி சேர சோழ பாண்டியர் மூவரும் வந்திருந்தனர். திருமணம் சிறப்புற நடைபெற்றது. அங்கிருந்த மூவேந்தரும் ஔவையாரிடத்துப் பனந் துண்டம் ஒன்றனைக் காட்டி, அதனைப் பனம்பழமாக மாற்றித் தருமாறு வேண்டினர். புலவரும் அத்துண்டத்தினை நிலத்தில் நட்டுப் பின்வரும் பாடலைப் பாடினர்.

திங்கட் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கருகிட வந்துநின் றூர்மணப் பந்தலிலே
சங்கொக்க வெண்குருத்து ஈன்றுபச்சோலை சலசலத்து
நுங்குக்கண் முற்றி அடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனந்துண்டமே.

ஔவையாரின் விருப்பத்திற்கேற்ப பனந்துண்டமும் மூன்று கனிகளைக் கொடுத்தது. மூவேந்தரும், அவையிலுள்ளோர் பிறரும் ஔவையாரின் ஆற்றலை வியந்து மகிழ்ந்தனர்.

**பாவேந்தரும் கனிகளும் :**

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தாம் பாடிய 'குடும்ப விளக்கு' என்னும் நூலில் மா, பலா, வாழை முதலான கனிகளை நமக்குக் காட்டுகின்றார். மரகதத்தின் இலைக் காம்பில் ஊஞ்சலாடும் மாணிக்க மாம்பழங்களையும், சிற்றானைக்குட்டிபோல் மணக்கும் பலாப்பழங்களையும் காட்டும் கவிஞர் கொய்யாப்பழம் பற்றிக் கூறுதலைக் காண்போம்.

காட்டுமுயற் காதிலையும் களியானைத்
துதிக்கை அடிமரமும் வானில்
நீட்டுகிளைக் கொய்யாதன் நிரல்தங்கத்
திரள்பழத்தை நம்கண் ணுக்குக்
காட்டுகின்ற போதுகொய் யும்பழம்என்
போம்கையில் கொய்து வாயில்
போட்டுமென்ற போதேகொய்யாப் பழமென்
போம்பொருளின் புதுமை கண்டீர் !

மாம்பழக் கவிச்சிங்க நாவலர், அக்காரக்கனி நச்சுமனார் என்று கனிகளின் பெயர்களைத் தாங்கிய புலவரும் தமிழகத்தில் வாழ்ந்து வந்தனர்.

---

# 8. எல்லாம் இன்பமயம்

உலகம் சிலர்க்கு இன்பத்தின் உறைவிடமாகவும், சிலர்க்குத் துன்பத்தின் உறைவிடமாகவும் தோற்றமளிக்கின்றது. தண்ணொளி பரப்பும் வெண்ணிலா, 'கூடினார் பால் நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்' இருத்தலைக் காண்கின்றோம். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா!' எனப் பாடும் பாரதியார் இசையின்பத்தினை விதந்து கூறுகின்றார். இசையமுதத்தினை எங்கெல்லாம் பாரதியார் கேட்டு மகிழ்கின்றார் தெரியுமா? அவரது சொற்களிலேயே காண்போம்.

கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்
காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்
ஆற்று நீரோசை அருவி ஒலியினிலும்
நீலப் பெருங்கடல் எந்நேரமுமே தானிசைக்கும்
ஓலத் திடையே உதிக்கும் இசையினிலும்
மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும் நெல்லிடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணம் இடிப்பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்

வேயின் குழலோடு வீணைமுதலா மனிதர்
வாயினிலும் கையாலும் வாசிக்கும் பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்.

இசைதரும் இன்பத்தினும் சிறந்த ஓர் இன்பத்தினைத் திருவள்ளுவர் நமக்குக் காட்டுகின்றார். குழந்தை பேசும் மழலைச் சொற்களைக் கேளாதவர் 'குழலோசை இனியது; யாழ்தரும் இசை இனியது' எனக் கூறுவர். செவிக்கு இன்பம் தருவன மக்கள் பேசும் மழலைச் சொற்கள்; உடற்கு இன்பம் மக்கள் மெய்தீண்டலாகும். கலைமகள் 'மக்கள் பேசும் மழலையிள் உள்ளாள்' எனக் கூறும் பாரதியார் 'தீண்டும் இன்பம்' குறித்தும் கூறுகின்றார். காக்கைச் சிறகினில் கண்ணனைக் காணும் புலவர், "தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா! நின்னைத் தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா!" எனப் பாடி மகிழ்கின்றார் 'மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்' என்னும் திருக்குறட் பகுதியுடன் பாரதியார் பாடலும் ஒப்புநோக்கி மகிழ்தற்குரியது.

பாண்டியன் அறிவுடை நம்பி மக்கட்செல்வத்தின் சிறப்பினை ஒரு பாடலில் அழகுறக் கூறுகின்றான். பலருடன் கூடியுண்ணும் பெருஞ்செல்வராயினும், அவர்க்குக் குழந்தைச் செல்வம் இல்லையேல் அவரது வாழ்நாள் வீணேயாகுமெனக் கூறுகின்றான்.

"மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம்வாழு நாளே" - புறம்.

பெரியாழ்வார் தம்மைத் தாயாகக் கொண்டு கண்ணனைப் பாடும் பாடல்கள் கற்பார்க்குப் பேரின்பம் நல்கும். கண்ணனது குழந்தை விளையாட்டில் உள்ளம் பறிகொடுத்த யசோதை அவனது ஒவ்வொரு செயலிலும் இன்பம் காணுகின்ருள். இதனைக் குலசேகரர் பாடல் இனிது விளக்குகின்றது.

முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்
முகிழிளஞ் சிறுதாமரைக் கையும்
எழில்கொள் தாம்புகொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும்வெண் தயிர்தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும்
அணிகொள்செஞ் சிறுவாய் நெளிப்பதுவும்
தொழுகையும் இவைகண்ட அசோதை
தொல்லை இன்பத்துஇறுதி கண்டாளே.

எத்தனை நூல்கள் கற்பினும் குழந்தைச் செல்வம் அளிக்கும் இன்பக் கதைகளுக்கு ஈடாகுமோ?

இன்பக் கதைகளெல்லாம் — உன்னைப்போல்
ஏடுகள் சொல்வ துண்டோ?

ஈத்துவக்கும் இன்பம்:

எடுத்து வாழ்தலைக் காட்டிலும் கொடுத்து வாழ்வதில் இன்பம் காணலாம். தாம் பெற்ற பொருளைக் கரவாது மகிழ்ந்து கொடுக்கும் சான்ருேரிடத்துச் சென்று இரத்தலும் இன்பமேயாகுமெனத் திருக்குறள் கூறும்.

"இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உருஅ வரின்" — *திருக்குறள்*

பெருஞ்சித்திரனர் என்னும் புலவர் தாம் குமண னிடத்துப் பெற்ற பரிசிலை மனைவியிடம் கொடுத்து, எல்லோர்க்கும் தந்துதவுமாறு கூறுகின்ருர்.

> " இன்னோர்க்கு என்னது என்னொடும் சூழாது
> வல்லாங்கு வாழ்தும் என்னது நீயும்
> எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே!" - *புறம்*

வளமான வாழ்வு வாழ்தல் வேண்டுமென்று நினை யாது தாம் பெற்ற பரிசிலையும் பிறர்க்குப் பகிர்ந் தளிப்பதில் இன்பம் காணும் புலவரின் பண்பினை என்னென்பது ?

கர்ணன் போர்க்களத்தில் அம்புபட்டு வீழ்ந்து கிடந் தனன். கண்ணன் தவஞ்செய்யும் முனிவனுக வேடம் பூண்டு கர்ணன்முன் சென்று பரிசில் வேண்டினன். அந்நிலையில் கர்ணனல் என்ன செய்ய இயலும்? கொடையால் ஈட்டிய நல்வினையினைத் தருமாறு முனி வனுக வந்த கண்ணன் வேண்ட, அதனையும் கொடுத்து மகிழ்ந்தனன் கர்ணன். தனக்கு வேண்டிய வரமாகக் கர்ணன் முனிவனிடத்துக் கேட்பதும், அவனது கொடுத்து மகிழும் பண்பினைக் காட்டுகின்றது.

> " இல்லையென்று இரப்போர்க்கு இல்லையென்று உரையா
> இதயம் நீ அளித்தருள் "

என்பது கர்ணன் வாக்கு.

இம்மட்டோ ? தனது வாழ்வே பிறர்க்கு உதவியாக இருத்தலையும் கூறி மகிழ்கின்ருன்.

தருமன்மகன் முதலான அரிய காதல்
தம்பியரோடு எதிர்மலேந்து தறுகண் ஆண்மைச்
செருவில்எனது உயிரனேய தோழற்காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் தேவர்கோவுக்கு
உரைபெறுநல் கவசகுண்டலமும் ஈந்தேன்
உற்றபெரு நல்வினேப்பேறு உனக்கேதந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளும் செங்கண்மாலே!
மாதவத்தால் ஒருதமியன் வாழ்ந்தவாறே!

– *வில்லிபாரதம்*

**இன்பமும் துன்பமும் :**

'இன்பமுண்டேல் துன்பமுண்டு ஏழைமனே வாழ்க்கை' என்பது சுந்தரர் தேவாரம். வாழ்வில் இன்பதுன்பங்கள் மாறிவருவது இயற்கை. இன்பம் வந்தகாலே மகிழ்தலேயும், துன்பம் வந்தகாலே வருந்தியிருத்தலேயும் நாம் நாளும் காண்கின்றோம். இன்பத்தினேயும், துன்பத்தினேயும் ஒன்ருகக் கருதுபவர் வாழ்க்கையில் துன்புறுவதில்லேயெனக் கூறுகின்றது திருக்குறள். துன்பத்தினேயும் இன்பமாகக் கருதி வாழும் ஒருவன் பகைவராலும் சிறப்பிக்கப்படுவான் என மேலும் கூறுகின்ருர் திருவள்ளுவர். இன்பத்தினேயும், துன்பத்தினேயும் ஒன்ருகவே கொண்டு வாழ்ந்த இராமனது பண்பினேக் கம்பர் வாக்கில் காணலாம். இராவணனுல் அசோக வனத்தின்கண் சிறைவைக்கப்பட்டிருந்த சீதை இராமனது திருமுகச்சிறப்பினே எண்ணிப் பார்க்கின்ருள். அரசபாரத்தை ஏற்குமாறு கூறிய காலத்தும், அரசினேத் தம்பிக்குக் கொடுத்துக் கானகம் செல்லுமாறு ஏவிய காலத்தும் இராமனுடைய திருமுகம் ஒரே நிலேயில் காணப்பட்டதாம்.

மெய்த்தி ருப்பதம் மேவென்ற போதினும்
இத்திருத் துறந்து ஏகென்ற போதினும்
சித்தி ரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்தி ருக்கும் முகத்தினை உன்னுவாள்.

— சுந்தரகாண்டம்

கானகம் செல்லுமாறு கைகேயி கூறிய சொற்களைக் கேட்ட இராமன் மகிழ்ச்சியே கொண்டனன். பாரம் நிறைந்த வண்டியில் பூட்டப்பெற்ற எருது அருளுடை ஒருவனால் அவிழ்த்துவிடப்பட்டால் அது எவ்வாறு மகிழுமோ, அங்ஙனமே மகிழ்ந்தானும் இராமன்.

"உருளுடைச் சகடம் பூண்ட
உடையவன் உய்த்த காரேறு
அருளுடை ஒருவன் நீக்க
அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்."

**நாடும் நல்லின்பமும்:**

துலாக்கோல் போன்று நிடுநிலைமை பிறழாதிருத்தலே சான்றோர்க்கு அணியெனக் கூறும் திருவள்ளுவர் ஒரு நாட்டிற்கு அணிகளாக ஐந்தனைக் கூறுகின்றார். பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், காவல் ஆகிய ஐந்தும் நாட்டிற்கு அணிகளாகும் என்கின்றார். 'விழவும் வேள்வியும் சான்றோரும் உடைமையானும், நுகர்வன உடைமையானும், நிலநீர்களது நன்மையானும் வாழ்வார்க்கு உள் நிகழ்வது' என இன்பத்திற்கு உரையாசிரியர் உரை கூறுவர். சான்றோர் பலர் ஒரு நாட்டிலிருத்தலால் அந்நாடடிற்கு இன்பமுண்டாகும். நிலவளனும், நீர்வளனும், ஏனைவளங்களும் ஒரு நாட்டில் நிறைந்து

காணப்படினும், சான்றோர் இல்லையேல் அந்நாடு நாடாகாது என்பது ஆன்றோர் கருத்தாகும்.

"எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்பது ஔவையார் கூற்றாகும்.

ஆண்டுகள் பலவாகியும் தமக்கு நரை தோன்றா திருத்தலுக்குப் பிசிராந்தையார் பல காரணங்களைக் கூறுகின்றார். ''எனது மனைவியும், மக்களும் நற்பண்புடையவர்; எனது நாட்டு வேந்தனும் அல்லவை செய்யான். இவற்றிற்கெல்லாம் மேலாக யான் வாழும் ஊரின்கண் சான்றோர் பலர் வாழ்கின்றனர். ஆகவே எனக்கு நரை தோன்றவில்லை'' என்கின்றார்.

"ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே" – *புறம்*

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பமே கிடைக்குமெனக் கூறும் திருவள்ளுவர் பொறுமையுடன் வாழ்வோர் பொன்றுந் துணையும் அழியாப் புகழ் எய்துவர் எனவும் கூறுகின்றார். தம்மைச் சிலுவையிலிட்டுத் துன்புறுத்தியோரையும் மன்னித்தருளுமாறு ஏசுநாதர் இறைவனை வேண்டுகின்றார். ''இன்னதென அறிகில்லார் தாம் செய்வது இவர் பிழையை மன்னியும்'' என வேண்டி அழியாப் புகழ்பெற்றார்.

**சேக்கிழார் காணும் பேரின்பம் :**

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். – *திருக்குறள்*

பேரின்பத்தை நாடி வாழ்ந்த அடியார்களின் வரலாற்றைக் கூறும் நூல் திருத்தொண்டர் புராணமாகும். செயற்கரிய செயல்களைச் செய்து அவர்கள் பேரின்பம் பெற்றனர். அவர்களது செயல்கள் உலக நிலையில் நிற்பார்க்கு வியப்பினை அளிக்கும். கண்ணினை இடந்து தந்தனர் ஓர் அடியார்; அழகிய உருவினை நீத்துப் பேய் வடிவினை வேண்டிப் பெற்றார் ஓர் அடியார்; 'என் கடன் பணி செய்து கிடப்பதே' எனக் கூறி அதன்வழி நடந்து காட்டியவர் ஓர் அடியார்; அடியார்களது ஆடைகளை வாங்கி அழுக்கைப் போக்கித் தருவதில் இன்பங்கண்டார் மற்றொருவர்.

சமணரது சொற்கேட்டுத் திருநாவுக்கரசரைத் தண்டிக்க விழைந்தான் பல்லவ மன்னன். மன்னவன் கட்டளைப்படி அமைச்சர் சிலர் திருவதிகை வந்து திருநாவுக்கரசரை அழைத்தனர். அதுகேட்ட நாவரசர் மறுமாற்றத் திருத்தாண்டகம் பாடி அவர்களுடன் செல்வதற்கு ஒருப்பட்டிலர். சிவபெருமானது திருவளைக் கொண்டு வாழும் தமக்கு 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' எனப் பாடுகின்றார்.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே"

—அப்பர்.

பித்தனென்று இறைவனைப் பாடிப் பரவிய சுந்தரர் தில்லைக்குச் சென்றனர். அங்கு எழுந்தருளி யிருக்கும் நடராசப் பெருமானது குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், வெண்ணீறு பூசிய திருமேனியும், எடுத்த பொற்பாதமும் கண்டு எல்லையில்லா இன்பத்தில் திளைத்தார். அவரது ஐம்புலன்களில் கண் ஒன்றே தொழிற்பட்டது. நான்கு கரணங்களின் செயல்களும் சிந்தை ஒன்றின் செயலே ஆயின. முக்குணங்களும் சாத்துவிகம் என்னும் ஒன்ருக ஆயின. இவ்வாறு சுந்தரர் தம்மை மறந்த நிலையில் இறைவனது பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்தார். '' பெருமானே ! உனது திருநடனம் கண்டு கும்பிடும் வாழ்வு பெற்ற இம்மானிடப் பிறவியே எனக்குப் பேரின்பம் அளிக்கின்றது '' எனவும் கூறினர். இறைவனது திருநடனத்தில் சுந்தரர் ஒன்றுபட்டு நின்ற நிலையினைப் பின் வரும் சேக்கிழார் பாடல் இனிது விளக்கும்.

ஐந்து பேரறிவு கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

# 9. நகைச்சுவை

இருளையும் பகற்பொழுதாக்கிக் காட்டும் இன்றைய உலகில் பகற்பொழுதும் சிலர்க்கு இரவாகவே உள்ளது. ஏன் தெரியுமா? பலருடனும் கூடிமகிழ்ந்து பேசமாட்டாதவர்க்குப் பகலும் இரவும் ஒன்றேயாகுமென ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னமே திருவள்ளுவர் கூறிப்போந்தார்.

நகல்வல்லார் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்

'நகைச்சுவை என்னும் ஒன்றிலையேல் நான் என்றோ தற்கொலை செய்துகொண்டிருப்பேன்' என்கிறார் காந்தியடிகள். ஆங்கில இலக்கியத்தில் பெர்னார்ட்ஷா அவர்களின் எழுத்துக்களில் நகைச்சுவை நிறைந்திருத்தலைக் காணலாம். தமிழிலக்கியத்தில் நகைச்சுவை கலந்த பாடல்கள் எண்ணிலடங்கா! வீரமாமுனிவரது 'பரமார்த்தகுரு கதை' நகைச்சுவை நிறைந்திருத்தலைக் கற்றோர் அறிவர். இன்றைய தமிழ் எழுத்தாளர்களின் எழுத்துக்களிலும் நகைச்சுவையினை நிரம்பக் காணலாம்.

**கல்கியும் நகைச்சுவையும்:**

கல்கியின் எழுத்துக்கள் அனைத்திலும் நகைச்சுவை காணப்படும். சிறுகதை, கட்டுரை, விமரிசனம், அரசியல் இப்படி எதுவாயினும பிறரைச் சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்தே எழுதுவார். புதுமைப்பித்தன் எழுத்துக்களிலும் நகைச்சுவை நிறைந்திருக்கும். கல்கியின் நகைச்சுவைக்கு ஓர் எடுத்துக்காட்டினைக் காண்போம்.

" திருக்கழுக்குன்றத்தில் முக்கியமான விசேஷங்கள் இரண்டு. முதன்மையான விசேஷம் குன்றின் உச்சியில் இரட்டைக் கழுகுகள் வந்து பூசாரியின் கையிலிருந்து உணவு உட்கொள்ளும் காட்சி. இரண்டாவது, குன்றின் அடிவாரத்திலுள்ள திருப்பாசிக்குளம். இந்தக் குளத்தில் ஸ்நானம் செய்வதன் குணங்களைப்பற்றி அவ்வூர்க் காரர்கள் சொல்ல ஆரம்பித்துவிட்டால், அப்புறம் அவர்களை நிறுத்தச் செய்வது கடினம். அதன் முக்கிய விசேஷம் சர்வரோகங்களையும் நிவர்த்தி செய்வதுதான். இவ்வளவு சமீபத்திலே இத்தகைய அமிர்ததடாகம் ஒன்று இருக்கும்போது சென்னையிலே இவ்வளவு மருந்துக் கடைகள் எப்படிச் செழித்து ஓங்குகின்றன என்று கொஞ்சம் சந்தேகமாயிருந்தது.

குளக்கரையை நாங்கள் அடைந்ததும், துணிகளை வரிந்து கட்டிக்கொண்டு ஸ்நானம் செய்வதற்கென்று படிக்கட்டில் இறங்கினோம். ஆனால் பாதிப்படிகள் இறங்கியதும் எங்கள் சந்தேகம் பறந்தேபோய்விட்டது. ஒன்று நிச்சயம். அந்தக் குளத்து ஜலத்தில் இறங்கி விட்டால் எப்படிப்பட்ட ரோகமும் விடைபெற்றுக் கொள்ளும் என்பதில் சந்தேகமில்லை. அவ்வளவு பயங் கரமான பாசியைக் கண்டு எந்த வியாதிதான் பயப் படாமல் இருக்கமுடியும்? "

**பாரதியும் நகைச்சுவையும்:**

"நான் சோம்பர்க்குத் தொண்டன். எனது நண்பர்களெல்லாம் புளியஞ்சோற்றுக்குத் தொண்டர் கள். சிலர் மட்டிலும் பணத்தொண்டர். காலனுவின்

அடியார்க்கும் அடியார்.'' இப்படிக் கூறும் பாரதியாரது கவிதைகளிலும், உரைநடையிலும் நகைச்சுவை நிறைந்திருக்கும். கண்ணனைத் தீராத விளையாட்டுப் பிள்ளையாகக் காணும் பாடலில் பாரதி கூறும் கண்ணன் விளையாட்டுக்கள் அனைத்தும் கற்பார்க்கு மகிழ்வைத் தரும். பெண்ணொருத்தியிடம் மணமிக்க மலரினைக் கொண்டுவந்து கண்ணன் 'உனது கண்களை மூடிக் கொள்; உனது கூந்தலில் மலர் சூட்டுவேன்' என்பான். அவன் சொற்கேட்டு அவளும் கண்மூடியிருப்பாள். அவளைக் கண்மூட வைத்து, மலரினை அருகிலுள்ள அவளது தோழிக்குச் சூட்டிவிடுவான். அது மட்டுமா? கண்ணன் குழலிசை கேட்ட பெண்டிர் கள்ளால் மயங்குது போன்று கண்மூடி வாய்திறந்து வியந்து நிற்பர். அதுகண்ட கண்ணன் குழலிசைப்பதை நிறுத்தி அவர்களது வாயினில் கட்டெறும்புகளைப் பிடித்துப் போட்டு விடுவான்.

அழகுள்ள மலர்கொண்டு வந்தே — என்னை
அழஅழச் செய்தபின் 'கண்ணை மூடிக்கொள்
குழலிலே சூட்டுவேன்' என்பான் — என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான்
அங்காந் திருக்கும்வாய் தனிலே — கண்ணன்
ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான்
எங்காகிலும் பார்த்த துண்டோ — கண்ணன்
எங்களைச் செய்கின்ற வேடிக்கை யொன்றோ?

### பாவேந்தரும் நகைச்சுவையும்:

ஆலமரத்தில் அமர்ந்துள்ள குரங்கொன்று கிளையினில் தொங்கும் பாம்பினை விழுதென எண்ணி, அதனைத் தொடப் பாம்பு சீறுகின்றது. விளக்கினை

அறியாது தொட்டபிள்ளை அலறி ஓடுவதைப் போல், குரங்கும் தாவிக் குதித்து ஓடி, ஏனைய விழுதுகளை யெல்லாம் பாம்பென எண்ணி மரத்தின் உச்சிக்குச் சென்றுவிடுகின்றது. அங்கு சென்றபின்பும் அதன் அச்சம் தணிகின்றதா? இல்லை. தனது வாலையும் கண்டு பாம்போ, விழுதோவென ஐயம் கொள்ளுகின்றது.

கிளையினில் பாம்பு தொங்க
விழுதென்று குரங்கு தொட்டு
விளக்கினைத் தொட்ட பிள்ளை
வெடுக்கெனக் குதித்ததைப் போல்
கிளைதொறும் குதித்துத் தாவிக்
கீழுள்ள விழுதை யெல்லாம்
ஒளிப்பாம்பாய் எண்ணி எண்ணி
உச்சிபோய்த் தன்வால் பார்க்கும்.

— *அழகின் சிரிப்பு.*

பூதத்தினைக் கண்டு அஞ்சி ஓடுவோரைக் காணுங்கள். அத்தெருவில் அவ்வீட்டில் பூதமென்று கூறிக்கொண்டு கொத்துகின்ற வௌவால் போல் மரத்தின் மீதும், தூங்கும் பூனைபோன்று பரண்களின் மீதும், முத்தெடுக்கும் மனிதரைப் போன்று கிணற்றினுள்ளும், மூட்டைப்பூச்சி போன்று வீட்டின் இடுக்குகளிலும் பதுங்கி வாழும் மனிதரைக் கண்டு யாருக்குத்தான் சிரிப்பு வராது? அவர்களது அச்சம் இதனோடு முடிகின்றதா? சிலர், முன்னும் பின்னும் வருவோரையும் பூதமென நினைந்து அஞ்சி, எதிர் வருவோரை அச்சத்தால் அணைத்துக்கொள்ள, அவர்களும் பூதம் தம்மைப் பிடித்துக்கொண்டது என்றஞ்சி ஓடி, நின்றிருக்கும்

குதிரையினையோ வேறு எதனையோ தொட்டு மேலும் அச்சங்கொண்டு கீழே விழுகின்றனர். அஞ்சி அஞ்சிச் சாகும் இந்த அவல மனிதரைக் காட்டும் கவிஞரது பாடல்களில் ஏனைய சுவைகளுடன் நகைச்சுவையும் விரவியிருத்தலைக் காணலாம்.

**கவிமணியும் நகைச்சுவையும் :**

மலரும் மாலையும், ஆசியஜோதி முதலான அரிய கவிதை நூல்களைப் பாடிய கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் நாஞ்சில் நாட்டு மக்கள் வாழ்க்கையினை 'மருமக்கள் வழி மான்மியம்' என்னும் நூலில் அழகுற விளக்குகின்றார். இந்நூலின்கண் நீதிமன்றத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும், அங்கு வாங்கப்படும் 'பீசு' குறித்தும் நகைச்சுவை தோன்றக் கூறுதலைக் காணுங்கள்,

"கோர்ட்டுப் பீசு குமஸ்தாப் பீசு
கூடிக் காப்பி குடிக்கப் பீசு
வக்கீல் பீசு மகமைப் பீசு
வக்கா லத்து வகைக்கொரு பீசு
எழுதப் பீசு சொல்லப் பீசு
எழுதிய தாளை எடுக்கப் பீசு
நிற்கப் பீசு இருக்கப் பீசு
நீட்டின கையை மடக்கப் பீசு
பாரப் பீசு கீரப் பீசு
கண்டு பீசு காணப் பீசு
இப்படி யாக என்றென் றைக்கும்
பீசு பீசாகப் பிச்சுப் பிடுங்கும்"

மனிதரைக் கண்டு நாமும் நகைப்போம்.

**வேதநாயகரின் நகைச்சுவை:**

நீதிமன்றத்தில் நீதிபதியாக வேலைபார்த்த வேத நாயகம்பிள்ளையவர்கள் கவிதைபாடுவதிலும் வல்லவ ராயிருந்தார். 'சர்வ சமய சமரசக் கீர்த்தனை' என்னும் நூல் இவர் பாடிய கீர்த்தனங்கள் அடங்கிய ஒன்ருகும். இறைவனை நினைப்பதற்கும் நேரமில்லை யென ஒரு கீர்த்தனையில் வருந்திப் பாடும் இவரும் கவிமணி போன்று நீதிமன்றத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளைச் சுவைபடக் கூறுகின்ருர்.

**"தொண்டை கிழித்துக்கொண்டு சண்டைசெய்யும் வக்கீல்கள்**
**அண்டையில் இருந்து நம்மண்டையை உடைத்தால்**
**— நினைப்பதெப்போது நெஞ்சே ஐயன்பதத்தை."**

வாழ்நாளெல்லாம் உலோபியாக வாழ்ந்த ஒருவன் உயிர்பிரியும் நிலையில், தான் தேடிய பொருளைப் பிறர்க்குத் தானமாகக் கொடுத்து வாழ நினைந்து மனைவி மக்களை அழைத்தனன். அவனது உள்ளக் கருத்தினை அறிந்துகொண்ட அவர்கள், மேலும், அவன் ஒன்றும் உரையாவண்ணம் அவன்மேல் விழுந்து அழுதனர். அவர்கள் விழுந்தது தாங்காது உலோபியும் இறந்து பட்டான். ஆகவே மக்கட்குச் செல்வத்தைப் போன்ற பகை வேறில்லை என்கிருர் வேதநாயகர். இதனைத்தான் 'அன்றறிவாம் என்ருது அறம் செய்க' எனத் திருக்குறள் கூறுகின்றது.

இளமையில் அறஞ்செய்யாது பொருளைச் சேர்த்து வைத்து, முதுமையில் உயிர்பிரியும் நிலையில் கிடந்த ஒருவன் அறஞ்செய்ய விரும்பியதனை வேதநாயகர்

கூறுவது போன்று, சீவக சிந்தாமணியும் எடுத்துரைக்கின்றது. படுக்கையில் கிடந்த ஒருவன் தனது மனைவியினிடத்துத் தான் தேடிய பொருளைக் கையினால் அளவு காட்டிப் பிறர்க்கு எடுத்தளிக்குமாறு ஏவினான். வாய் திறந்து பேசவும் இயலாத நிலையில் இருக்கும் அவன் இவ்வாறு கையால் குறிப்புக் காட்டினான். அவனது குறிப்பினை உணர்ந்த மனையாளோ தான் ஒன்றும் அறியாதவள் போன்று நடித்து, ''ஐயா! விளம்பழம் கேட்கின்றீர். அஃது உமது உடலுக்கு ஆகாது'' எனக் கூறி அவனது கருத்தை மறைத்து விடுகின்றாள்.

> கையால் பொதித்துணையே காட்டக்
> கயற்கண்ணாள் அதனைக் காட்டாள்
> ஐயா விளம்பழமே என்கின்றீர்
> ஆங்கதற்குப் பருவம் அன்றுஎன்
> செய்கோ எனச்சிறந்தாள் போற்சிறவாக்
> கட்டுரையால் குறித்த எல்லாம்
> பொய்யே பொருளுரையாம் முன்னே
> கொடுத்துண்டல் புரிமின் கண்டீர்!

**மயக்க உணர்வு :**

புகழேந்தியார் பாடிய நளவெண்பா மயக்க உணர்வினால் தோன்றும் நிகழ்ச்சியொன்றினைக் காட்டுகின்றது. அது கற்பார்க்கு நகை விளைவிக்கும். நளனும், தமயந்தியும் திருமணத்திற்குப் பின்னர் சோலைவளம் காணச் செல்கின்றனர். சோலையில் பல அழகிய காட்சிகளை நளன் தமயந்திக்குக் காட்டிச் செல்கின்றான். பெண்ணொருத்தி சோலையில் மலர் கொய்து கொண்டிருக்

கின்ருள். அவளது ஒளிமிக்க அழகிய முகத்தினைத் தாமரை மலரென நினைந்து வண்டொன்று மொய்க்கத் தொடங்குகின்றது தன்முகத்தில் வந்து மொய்க்கும் வண்டினைத் தனது கைகளால் விலக்குகின்ருள் மங்கை. அக்கைகளையும் காந்தள் மலரெனக் கருதி அவளை விட்டு நீங்காது வண்டு வட்டமிட்டுக் கொண்டே இருக்கின்றது. இதனுல் அந்நங்கை அஞ்சி நிற்கின்ருள். இது புகழேந்தி யார் காட்டும் காட்சியாகும்.

மேற்கூறிய நிகழ்ச்சிக்கு இணையான மற்ருென்றினையும் காண்போம். மயக்க நிலையில் இருக்கும் மங்கையொருத்தி தேனுண்டு மயங்கிக்கிடக்கும் வண்டினை நாவற்கனியெனக் கருதிக் கையினில் எடுத்துப் பார்க்கின்ருள். மயங்கிய நிலையில் இருக்கும் வண்டு மங்கையின் முகத்தை நிலவெனவும், தான் இருக்கும் இடத்தினைத் தாமரை மலரெனவும் நினைந்தது. ஆகவே நிலவு வெளிப்பட்டால் தாமரை குவியுமென் றஞ்சி வண்டு பறந்து சென்றது. அது கண்ட மங்கை நாவற்கனி பறக்கின்றதேயென வியக்கின்ருள். பாடலைப் படித்து மகிழ்வோம்.

தேனுகர் வண்டு மதுதனையுண்டு
தியங்கியே கிடப்பதைக் கண்டு
தானதைச் சம்புவின் கனியென்று
தடங்கையால் எடுத்துமுன் பார்க்க
வானுறுமதியம் வந்ததென் றெண்ணி
மலர்க்கரம் குவியுமென் றஞ்சிப்
போனதுவண்டோ பறந்தது பழந்தான்
புதுமையோ இதுவெனப் புகன்ருள்.

## இராமகாதையில் நகைச்சுவை :

கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாடியுள்ள இராம காதையுள் பல்வகைச் சுவைகளும் நிறைந்துகிடத்தலைக் காணலாம். இராமனுடைய பேரழகில் மயக்கங்கொண்ட சூர்ப்பநகை அவனிடத்தினின்று சீதையைப் பிரித்தா லன்றித் தன்னை அவன் விரும்பானென நினைந்தனள். இலக்குவன் சீதைக்குத் துணையாக நிற்பதனை அறியாது, சீதை தணித்திருப்பதாக எண்ணி அவளைத் தூக்கிச் செல்லவும் முயன்றனள். அதுகண்ட இலக்குவன் சூர்ப்பநகையினைப் பற்றி அவளது மூக்கினை அறுத்தனன். மூக்கறுபட்ட அவள் சிறிதுநேரம் புலம்பிக்கிடந்து, பின் இராமனை நோக்கி அவர்கள் தனது மூக்கினை அரிந்த தற்குக் காரணம் கற்பித்துக் கூறினள். அப்பொழுது அவள் கூறும் சொற்கள் கற்பார்க்கு நகை விளைவிக்கும்.

பொன்னுருவப் பொருகழலீர் புழைகாண
  மூக்கரிவான் பொருள்வேறு உண்டோ
இன்னுருவம் இதுகொண்டுஇங்கு இருந்தொழியும்
  நம்மருங்கே ஏகாள் அப்பால்
பின்னிவளை அயலொருவர் பாரார்என்றே
  அறிந்தீர் பிழைசெய் தீரோ
அன்னதனை அறிந்தன்றோ அன்பிரட்டி
  பூண்டதுநான் அறிவி லேனே ?

— சூர்ப்பநகைப் படலம்.

இராவணன் முன்னர் இருந்த அனுமன் தன்னை 'வாலிசேய் விடுத்த தூதன்' என்று கூறிக்கொண்டனன். அதுகேட்ட இராவணன் வாலியால் தான் பட்ட துன்

பத்தினை நினைந்து நடுக்கங்கொண்டு 'வாலி வலியன் கொல்?' என அனுமனை வினவினன். இதற்கு அனுமன் கூறும் விடை நகை விளைக்கின்றது. "இராவண அஞ்சற்க! இராகவனது அம்பொன்றால் வாலி மேலுலகு அடைந்தான். அவன் திரும்பி வாரான். அவனது வாலும் அழிந்துபட்டது" என்பது அனுமன் கூற்றாகும். வாலியினது வாலின் வல்லமையை இராவணன் நன்கு உணர்ந்தவனன்றோ? 'வெஞ்சின வாலி மீளான் வாலும் போய் விளிந்தது' என்ற அனுமன் கூற்று நகைச்சுவைக்குச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டாக இருத்தலை அறியாதார் யார்?

---

# 10. விசயன்

"கண்ணனும், பார்த்தனும், சீதையும், அனுமனும், பரதனும் பூஜைக்கு உரிய உயிர்கொண்ட உண்மை மூர்த்திகள். வெறும் கதாபாத்திரங்களல்ல. பெரியோர் களையும் பெற்ருேர்களையும் வீரபுருஷர்களையும் பார்த்து அவர்களைப் பின்பற்றுவது ஒருவிதம். கதைகளைப் படித்துப் பின்பற்றுவது மற்ருெருவிதம். பரதனையும் சீதையையும் பீமனையும் பின்பற்றுவது உயிர்கொண்ட முன்னேர்களைப் பின்பற்றுவது போல்! கங்கையி னின்றும் காவேரியினின்றும் தாகத்துக்குத் தண்ணீர் எடுத்துக்கொள்ளலாம். ஆனல் அந்த ஆறுகள் குடி தண்ணீர் சாதனங்கள் மட்டுமல்ல. ஜீவ நதிகள். வணங்க வேண்டிய தெய்வங்கள்." திரு. இராசகோபாலாச் சாரியார் அவர்கள் தாம் எழுதிய 'வியாசர் விருந்து' என்னும் நூலின் முன்னுரையில் இவ்வாறு கூறுகின்ருர். நாம் கற்கும் நூல்களிலுள்ள நல்ல சில பாத்திரங்களின் வழிநின்று நாமும் நற்கதியடைதலே கல்வியின் சிறந்த நோக்கமாகும். இதனையே 'கற்றதனல் ஆய பயன் என்கொல்?' என்று திருவள்ளுவர் கூறுகின்ருர்,

பாண்டவருள் ஒருவனய விசயன் பிறந்தகாலை அனைத்து உலகங்களும் மகிழ்ச்சியடைந்தன. முனிவர் மங்கல மறையினைப் பாடினர். கடவுளர் கணங்கள் கற்பக மலர்கள் சிந்தி ஆடினர். எங்கும் நன்னிமித்தங்கள் தோன்றின. பங்குனித் திங்கள் உத்திரநாளில் தோன்றி

யதால் விசயன் பற்குனன் என்னும் பெயரும் பெற்றுன். பார்த்தன், தனஞ்சயன், அருச்சுனன் முதலான வேறு பெயர்களும் இவன் பெற்றிருந்தான்.

எங்கும்நல் நிமித்தம் செல்ல
இருநிலம் மகிழ்ச்சி கூரப்
பங்குனி நிறைந்த திங்கள்
ஆதபன் பயிலும் நாளில்
வெங்குனி வரிவில் வாழ்க்கை
விசயனும் பிறந்தான் வென்றிப்
பங்குனன் என்னும் நாமம்
பகுதியால் படைத்திட் டானே!

– *வில்லி பாரதம்.*

**விசயன் விற்பயிற்சி :**

துரோணரைத் தனது ஆசிரியராகப் பெற்ற விசயன் வில்லாற்றலில் சிறந்து விளங்கினுன். கொல்லிமலேயினே ஆண்டுவந்த ஓரி என்பானது வில்லாண்மையும், கொடையும் சங்க இலக்கியங்களில் சிறப்பாகக் கூறப் படுகின்றன. வல்வில் ஓரி எனவும் இவன் அனழக்கப் பெற்றுன்.

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇப்
புகழ்தலேப் புகர்க்கலே உருட்டி உரல்தலேக்
கேழல் பன்றி வீழ அயலது
ஆழல் புற்றத்து உடும்பில் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்"

என ஓரியின் வில்லாற்றல் வன்பரணரால் பாராட்டப் பெறுகின்றது. 'வெஞ்சிலையினுல் இவன் இராகவனை ஒக்கும்' எனக் கூறும்படி விசயன் வில்லாண்மையில் சிறந்து விளங்கினுன். துரோணர் ஒருநாள் தமது மோதிரத்தினைக் கிணற்றில் போட்டுவிட்டார். அம் பெய்து அதனை எடுக்குமாறு மாணவர்க்குக் கட்டளை யிட்டார். அருச்சுனனே அதனை எடுத்துக் கொடுத் தனன். மேலும், துரோணர் ஒரு மரத்திலுள்ள இலை களைக் காட்டி அம்பெய்து எல்லா இலைகளையும் துளை செய்யுமாறு ஏவினுர். ஏனையவரால் இயலாத இச் செயலினை விசயனே செய்து காட்டினுன். துரோணர் ஒருநாள் நீராடுங்கால் அவரது காலினை முதலையொன்று பற்றிக்கொண்டது. இஃதறிந்த ஏனைய மாணவர் வறிதே நின்றனர். அருச்சுனன் ஓர் அம்பு எய்து முதலையைக் கொன்று ஆசிரியரை முதலையின் பிடியினின்று பாது காத்தான். உயிர்காத்த விசயனுக்குத் துரோணர் ஒரு சிறந்த கணையினைக் கொடுத்தார்.

"ஒருதனுவினுல் இதயம்மகிழ் குருவினுக்கு இவனும்
உயிர் உதவினுன் வரிசிலைக்
குருவும் இவனுக்கு நிலையாலும் மறையாலும்
வலிகூர் பகழிஒன்று உதவினுன்"

என இதனைப் புலவர் பாடுகின்றுர். அன்றுமுதல், 'இருவரும் நயந்து இன்னுயிரும் மனமுமென அருளும் விநயமும் மிகுந்தனர்கள்' என மேலும் கூறுகின்றுர் வில்லிபுத்தூரார். ஆசிரியர் கட்டளைப்படி பாஞ்சால நாட்டின்மேற் படையெடுத்துச் சென்று யாகசேனனை வென்று அவனைத் தேரில் பிணித்து, ஆசிரியர்முன் கொணர்ந்து நிறுத்தினன்.

**திரௌபதியை அடைதல்:**

பாஞ்சால நாட்டில் திரௌபதிக்குச் சுயம்வரம் நடத்தலை விசயன் கேள்வியுற்றான். பாண்டவர் ஐவரும் அப்பொழுது மறையவர் உருவில் இருந்தனர். மன்னர் பலரும் திரௌபதியின் சுயம்வரத்திற்கு வந்திருந்தனர். பாண்டவரும் அந்தணர் உருவில் அவைக்கு வந்தனர். அவையிலிருந்தோரை நோக்கித் திட்டத்துய்மன், "இங்குள்ள வில்லினை வளைத்து மேலே சுழலும் இலக்கை எய்பவன் எவனோ, அவனே திரௌபதிக்கு உரியவன் ஆவான்" என்றனன். கர்ணன் உள்ளிட்ட பலரும் இலக்கை எய்து வீழ்த்த முனைந்து தோல்வி யுற்றனர். அந்தணர் உருவிலிருந்த விசயன் திட்டத் துய்மனிடம் அனுமதி பெற்று இலக்கை எய்து வீழ்த் தினான். இவனது செயல்கண்ட பலரும் 'தனுநூலுக்கு ஆசிரியன் இவனே' எனப் புகழ்ந்தனர். விசயன் இலக்கை மட்டுமா வீழ்த்தினான்? இல்லை. 'திகிரிச் சுழல் இலக்கை அவையோர் தங்கள் ஊக்கமுடன் விழ எய் தான்' என வில்லிபாரதம் பகர்கின்றது. விசயனையே நினைந்திருந்த திரௌபதியும் 'இவன் விசயனே போலும்' என எண்ணினள். இன்னியங்கள் பல முழங்கத் திரௌபதி மலர்மாலையினை விசயன் கழுத்திலிட்டாள். திங்களும் உரோகிணியும் போன்று விசயனும், திரௌ பதியும் அவையினின்று சென்றனர்.

தீர்த்தயாத்திரை சென்ற விசயன் பாண்டியன் மகள் சித்திராங்கதையினையும், கண்ணன் தங்கை சுபத்திரை யினையும் திருமணம் புரிந்து கொண்டான். முனிவர் உருக்கொண்டு மறைந்திருந்து சுபத்திரையைத் திரு

மணம் புரிந்துகொண்ட விசயனை நோக்கி "அன்ன மென்னடை அரிவையர் பொருட்டு நீ இன்னம் என்ன என்ன மாதவஉருக் கொள்ளுதி?" எனக் கண்ணன் கேட்கின்றான். இவ்விடத்தில், வில்லிபுத்தூரார் 'கன்னன் ஆருயிர் கொள வளர்காளை' என விசயனைக் குறிக்கின்றார். விசயனுக்கும், சுபத்திரைக்கும் பிறந்தவனே அபிமன்யு ஆவான்.

**ஆசிரியரிடத்து அன்பு:**

விராடனுடைய பசுக்களை மீட்டு வருவதற்கு உத்தரனுக்குத் தேரோட்டியாகச் சென்றான் விசயன். அப்பொழுது பாண்டவர் மறைந்து வாழ்ந்து வந்தனர். போரில் தனக்கு முன் துரோணர் நிற்றலை அறிந்த விசயன் சிறிது தடுமாறினான். "ஒன்றுமறியாதிருந்த என்னை 'வில்லுக்கு விசயன்' என்று உலகோர் புகழுமாறு பல கலைகளைக் கற்பித்த தெய்வமாகிய தங்களுடன் போரிடுவது பஞ்சபாதகங்களில் ஒன்றாகும்" என்று விசயன் கூறினன். அதுகேட்ட துரோணர், "அருச்சுனா! செஞ்சோற்றுக்கடன் கழித்தற்கு நான் இங்கு வந்துள்ளேன். நமது உறவுமுறை பேசிப் பயனில்லை. உன் வில் வளைத்திடுக!" என்றனர். அர்ச்சுனனும் அம்புகளைத் தொடுத்துப் போர் தொடங்கினன். விசயனது வில்லாற்றல் கண்டு வியந்து துரோணரும் எதிர்நிற்கமாட்டாது ஓடினர்.

**கண்ணனைத் துணையாக அழைத்தல்:**

கண்ணனைத் தங்கள் பக்கம் சேருமாறு அழைத்தற்குத் துரியோதனன் துவாரகை சென்றான். துரியோ

தனன் சென்ற சமயம் கண்ணன் பொய்யுறக்கம் கொண்டிருந்தான். கண்ணன் உறங்குவது கண்ட துரியோதனன் அவனது தலைப்பக்கத்திலிருந்த இருக்கையொன்றில் அமர்ந்திருந்தனன். சிறிது நேரங்கழித்து வந்த விசயன் கண்ணனது திருவடிகளைப் பணிந்து நின்றனன். இச்செயல் விசயனது பணிவினைக் காட்டுகின்றது. பொய்த்துயில் நீங்கிய கண்ணன் முதலில் விசயனைக் கண்டு முகமலர்ந்தான். துரியோதனனது வரவினை விசயன் கூறிய பின்னரே கண்ணன் அவனை உரம்நெருங்கப் புல்லி, இன்சொலால் உவகை செய்தான். 'கண்ணனிடத்து அருளைக் கேட்டான் விசயன்; பொருளைக் கேட்டான் துரியன்' எனப் பெரியோர் கூறுவர்.

விசயனும் துரியனும் வந்த காரணம் யாதெனக் கண்ணன் வினவ, இருவரும், "செருவில் நீ எமக்கு வெம்போர் செய்துணை ஆக வேண்டும். பொருவிலோய்!" என்றனர். தான் பாண்டவர்க்கு முன்னமேயே துணை செய்வதாக வகக்களித்திருத்தலைக் கண்ணன் கூற, துரியனும் "நீ போரில் படையெடுத்துப் போர் புரியாது இருந்தால் போதும்" என வேண்டினன். விசயன் கண்ணனைத் தனக்குத் தேரோட்டியாகுமாறு வேண்டினன்.

**அருச்சுனன் தவம்:**

வியாசருடைய சொற்படி சிவபெருமானிடத்தினின்று பாசுபதக்கணை பெறுதற்கு விசயன் தவஞ் செய்யலானுன். திருவைந்தெழுத்தினைக் கூறி, மேனி முழுவதும் நீறு பூசித் திருக்கயிலை மலையில் இருந்து

விசயன் தவம் புரிந்தான். தேவரெலாம் 'சிவன் இவனே போலும்' எனக் கூறுமாறு வரிசிலைக் கை விசயன் பூண்ட பெருந்தவத்தின் நிலை பேசவொண்ணுப் பெருமைகொண்டது.

ஒரு தாளின் நின்று, மற்ருெரு தாளினை நின்ற தாளின் தொடைமீது ஊன்றி, உளத்தை ஒருநிலைப் படுத்தி, விசும்பில் செல்லும் கதிரவனைக் கவர்வான் போன்று கரங்கள் நீட்டி, கதிரவனது கதிர்களைத் தாமரை மலரெனக் கருதிக் கண் இமையாது கண்டு தனக்கு எவரும் நிகரிலையென்று சொல்லுமாறு தவஞ்செய்தான். நாற்புறமும் வளர்த்த தீ விசயனைச் சிறிதும் வருத்த வில்லை. மேனை ஈன்ற குலப்பாவையுடன் கயிலைக் குன்றில் வாழும் பெருமானை உள்ளத்து இருத்தி உடல் புளகித்தான். அருச்சுனனது உடலினைத் துறுகல் என எண்ணி யானைகள் அவன்மீது உராய்ந்தன. கறையான் புற்றென எண்ணிப் பாம்புகள் தவழ்ந்து சென்றன. பூங்கொடிகள் மரமென்று கருதி அவனைச் சுற்றிக் கொண்டன. வெயிலென்றும், மழையென்றும், பனி யென்றும் பாராது 'சிவ சிவ' எனக் கூறிக்கொண்டு நெடுங்காலம் தவங்கிடந்தான். இந்திரனது ஏவலால் வந்த தேவமாதரும் விசயனது தவத்தைக் கெடுப்பதில் தோற்றனர். விசயனது மனத்திட்பம் கண்டு இந்திரனும் வியந்து வாழ்த்தினன்.

இந்நிலையில் துரியோதனன் கட்டளைப்படி மூகன் என்னும் அரக்கன் பன்றியுருவில் விசயனைக் கொல்ல வந்தனன். விசயனது தவங்கண்டு மனமிரங்கிய உமை யும், சிவனும் வேட்டுவர் உருக்கொண்டு வந்தனர்.

சிவகணங்களும் வேடுவராகித் தொடர்ந்தனர். தன்மீது பாயவந்த பன்றியின் முகத்தில் விசயன் ஒரு கணை தொடுத்தான். அக்கணை பன்றியின் பின்புறமாக ஊடுருவி வந்தது. சிவன் ஏவிய அம்பு பின்புறம் பட்டு முகத்தின் வழியே வந்தது. பன்றியின் காரணமாகச் சிவ வேடனுக்கும், விசயனுக்கும் போர் தொடங்கியது. முடிவில் விசயன் வில்லால் சிவ வேடனை அடித்த அடி மண்ணவர், விண்ணவர் முதலான எல்லோர்மீதும் பட்டது. சிவபெருமான் தனது உண்மையுருவினைக் காட்ட விசயன் பெரிதும் மகிழ்ந்து பலவாறு துதித்தனன்.

"அன்புறு தருமனுக்கு அனுசன் ஆயினேன்
நன்பரம் பொருளுக்கு நண்பும் ஆயினேன்
பொன்புரை மேனியாய்! போற்றினேன் உனை
என்பெருந் தவப்பயன் யார்பெற் றுர்களே"

என்று தான் பெற்ற பேற்றையும் வியந்து கூறினன். முடிவில் சிவபெருமானிடத்தினின்று பாசுபதக்கணை வேண்டிப் பெற்ருன்.

**கீதையின் தோற்றம் :**

போர்க்களத்தில் பாண்டவர் சேனையும், கௌரவர் சேனையும் வந்து நின்றன. அருச்சுனன் தன்னெதிரில் வீடுமர், துரோணர், கிருபர், துரியோதனன், அவனது தம்பியர் முதலான பலரும் நிற்கக் கண்டான். அவர்களைக் கொன்று அடையும் வெற்றியினை விசயன் விரும்பவில்லை. விசயனது கருத்தினை அறிந்த கண்ணன் அவனுக்கு மெய்யுணர்வினை உணர்த்தினுன். "உயிர்

களனைத்தும் ஐம்பெரும் பூதங்களால் ஆனவை. உயிர் களின் உடலுள் இறைவன் அறிவு உருவில் அமர்ந்து தொழிற் படுத்துகின்றுன். எல்லாப் பொருள்களும் நானேயாவேன். மறை முடிவும் நானே! உன்னை யான் என்றும் பிரிவதில்லை. முன்னொருகாலத்து நரனும் நாரணனும் ஆனோம்.

பின்னொரு பிறப்பின் யாமே இராமலக்குமப் பேர்பெற்றோம்
இந்நெடும் பிறப்பில் நீயும் யானுமாய் ஈண்டுநின்றோம்
நின்னிடை மயக்கும் இந்த நேயமும் ஒழிக!" என்று
தன்னிலை அவற்குக் காட்டித் தத்துவம் தெளிவித்தானே.

இவ்வுபதேசமே கீதையாயிற்று. வீமனது வேண்டு கோட்படி அனுமனும் அருச்சுனன் கொடியில் இருந்து அருள்செய்தான்.

**விசயனது நல்லறிவு:**

திரௌபதியின் சொற்கேட்டு விசயன் அமித்திர முனிவருக்குரிய நாவற்கனியினைக் கொய்தான். முனி வரது சினத்திற்கஞ்சிய பாண்டவர் கண்ணனை நினைந் தனர். கண்ணனும் அவர்முன் தோன்றி அவரவர் உள்ளக் கருத்தினை ஒளியாது கூறின், கனி மீண்டும் மரத்தில் பொருந்துமென்றனன். அப்பொழுது விசயன் கூறும் சொற்கள் அவனது நல்லறிவைக் காட்டுகின்றன.

ஊனமேயான ஊனிடை இருக்கும்
உயிரினைத் துறந்தும் ஒண்பூணும்
மானமேபுரப்பது அவனிமேல் எவர்க்கும்
வரிசையும் தோற்றமும் மரபும்

ஞானமேயான திருவடிவு உடையாய்!
ஞாலம் உள்ளளவும் நிற்றலினுல்
ஈனமே உயிருக்கு இயற்கை ஆதலினுல்
என்றனன் வீமனுக்கு இளையோன்.

– பழம்பொருந்து சருக்கம்.

"கண்ணன் துரியனிடத்துத் தூது செல்வதால் பயனில்லை. விதிவலியால் கெடுமதி கண் தோன்ருது. உவர்நிலத்தில் எதனை விதைத்தாலும் பயன் தராது. பன்ருகம் தனக்கு அமிர்தம் கொடுப்பினும் அது நஞ்சினையே நல்கும்" எனக் கூறும் சொற்களும் விசயனது அறிவினை விளக்காநின்றன.

கண்ணன் விசயனைப் பிரியாதிருந்த நிலையினை, வில்லிபுத்தூரார் பின்வருமாறு கூறுகின்ருர்.

"பேர்படைத்த விசயனுடன் மும்மைநெடும்
பிறவியினும் பிரியான் ஆகிச்
சீர்படைத்த கேண்மையினுல் தேர்ஊர்தற்கு
இசைந்தருளும் செங்கண் மால்"

– கிருட்டிணன் தூது சருக்கம்.

